

குருகுலர் குலதெய்வம்
அருள்மிகு பொன்னழகியம்மன்
(நுன்செய் இடையாறு)

The **Vettuvans** are to be found mostly in Tiruchengōdu Taluk; in Salem Taluk they number about 1,000. The Vettuvans of the Kongu country trace their descent from the followers of an ancient Rāja of Kālahasti, by name Muttani Rāja.[6] In the 2300th year of

Vettuvans.

---

[1] Pai-pālaiyam is about 4 miles south of Kuppam, in North Arcot District.

[2] *Castes and Tribes*, Vol. I, p. 5.

[3] *Census Report*, 1901, p. 140.

[4] Malaimāns are numerous in Pudupālaiyam near Rāsipuram, and in Palli-patti and Pachudaiyān-pālaiyam, south of Nāmugiripet.

[5] For a more detailed description of the Udaiyāns, see *Trichinopoly Gazetteer*, p. 108, and *South Arcot Gazetteer*, p. 109, and *Castes and Tribes*, Vol. VII, p. 206.

[6] For this account I am indebted to Mr. O. Sītāpati Rao, Sub-Magistrate of Nāmakkal, whose information is based on a booklet in the possession of Uma Mahēsvara Pandittar, chief *Guru* of the Talaghāt Vettuvans.



CHAP. III.
SURVEY OF CASTES.
—
Vettuvans.

the Kali-yuga, or about 800 B.C., when South India was ruled by the Chēra, Chōla and Pāndya kings, the king of the Chēras, growing old, was seized with a desire to eschew the world, and with his consort to go to Heaven without dying. After searching long and fruitlessly for a teacher who would guide him in the right way, he at length heard of a Saint of great sanctity, residing at Tiruvārūr in Tanjore District. Him he consulted; the holy man suggested that the king, if he wanted to make a really great sacrifice, should hand over the kingdom to him. This the king consented to do; the Saint bade him enter a *pushpaka-vimānam*, (aeroplane decorated with heaven-born flowers), which had been brought to earth for his convenience, and the King and Queen proceeded to Heaven, leaving the kingdom in the holy man's charge. The latter soon shifted his regal responsibilities by handing the kingdom over to Brahman administrators. These Brahmans ruled for some four centuries, towards the end of which period the kingdom suffered severely from the depredations of certain raiders called Ottiars and Salliars, who represented, it is said, the Kallars and Maravars of to-day. The Brahmans in their trouble applied for advice to the holy man who had given them the kingdom, and who must have lived to a great age. The Saint informed them that in the 2249th year of the Kali-yuga, when the Chēra, Chōla and Pāndya kings were in like quandary, they had sought and obtained help from the then Rāja of Kālahasti (in Chittoor District), and suggested that the Brahman rulers should do likewise. Envoys were accordingly sent, and, after some difficulty, the Rāja of Kālahasti, Muttani Rājan by name, after consultation with his Guru Umāpathi Dēsikar, was prevailed on to assist. On the 10th day after the new moon in the month of Tai in the year Pramatha, 2700 years after the beginning of the Kali-yuga, the Rāja of Kālahasti set out for the south. On the Kāvēri bank he settled his Guru at Nanjai-Edaiyār.[1] The Rāja and his fighting men then crossed the Kāvēri and moved on Karūr, where he worshipped at the ancient shrine of Pasupatīsvara-swāmi. From Karūr the Rāja conducted a successful campaign against the raiders, and, after crushing them, he repaired again to Nanjai-Edaiyār. Rāja and Guru then visited the Siddha Kōvil at the

---

[1] The locality is described in the original as follows:—
பொன்னிநதி தெற்கு புகழ் முத்தா நதி கிழக்கு நண்ணியதோர் சங்குமுக நன்றாய் கன்னிபதம் ஏற்றி அருள் பெரும் புகழ் குருசாமி க்கு மிக வீற்றிருக்க நல்லவிடமே.
the gist of the text being that the site chosen was the "Doab" formed by the Kāvēri and the Tirumani-muttār.

CHA SURV CAS — Vettu

foot of the Kanja-malai, to enjoy the society of the Rishis and Yōgis then living there. After their return to Nanjai-Edaiyār, the king was requested by the Brahman rulers to take over the kingdom as a reward for his services. The king consented, making Karūr his head-quarters, and posting a chief at Kapila-malai (15 miles south-west of Nāmakkal) and another at Siva-malai (near the boundary between Erode and Dhārāpuram Taluks).

This Muttani Rāja of Kālahasti seems to be the same as the Muttu Rāja referred to in the traditions of the Ambalakkārans, the Muttiriyans (Mutrāchas), the Urālis and the Valaiyans.[1] According to Vettuva legend, Muttani Rāja was a son of one Vijayan, born to him by a jungle girl, with whom he fell in love when hunting, and whose father he slew.[2] Vijayan's father was Kannappa Nāyanār, a hero whose name is associated with the traditions of the Vēdans, Bēdas, Ambalakkārans, and Valaiyans, and who is identified with one of the sixty-three Saivite Saints. Kannappa Nāyanār[3] was the eldest of ten brothers, sons of a Vēdar girl who contracted a *gāndharva* marriage with a descendant of Yayāthi, one of the heroes of the *Mahābhārata*.[4] No historical evidence has been adduced to corroborate the migration legends of these castes, but the community of tradition probably points to a community of origin, and the legend of a Vettuva Rāja still clings to Sankaridrug.[5]

---

[1] Vide *Castes and Tribes*, Vol. I, page 27 (Ambalakkūrars, and *Muttarasankoradu*), Vol. V, p. 127 (Mutrūchas), Vol. VII, pp. 242 and 213 (Urālis), and perhaps Vol. VII, p. 279 Muttāl Ravuttan, the special caste god of the Valaiyans).

[2] Hence the name " Vettuvan," one who cuts.

[3] Vide *Castes and Tribes*, Vol. VII, p. 332 (Vēdans), Vol. I, p. 26 (Ambalakkāran), *Trichinopoly District Gazetteer*, p. 114 (Valaiyans), and *E. S. M.* No. III Bēdas, p. 9.

[4] The second of the ten brothers earned the title Kāvalan, by guarding the environment of the Rishi Uthangi while he performed a *yāgam*. The third brother rode round the earth on a horse of the Dēvas and won the title Bhūvalan. The fourth son fell in love with two girls whom he met on the banks of the Tungabhadra, and wedded them on condition that he adopted the family title of their father, Māvalar. These three brothers became the progenitors of three tribes the Kāvalans, the Bhūvalans (or Pūvalans) and the Māvalans. The Bhūvalans are said still to exist near Perūr in Coimbatore Taluk, the other two tribes have not been traced.

[5] See Vol. II, p. 281. Mr. V. Venkayya suggests that the " Vidukādan *alias* Vatturāyan " mentioned in a fragmentary inscription of the Narasimha-Perumāl temple at Nāmakkal (No. 11 of 1906) may be connected with the Vettuva Rājas. Another tradition states that the Konga kings invited Vettuvans from the Chōla and Pāndya countries to assist them against the Kēralas, and a third tradition relates how the Vettuvans assisted the Chōla king Ādityavarma to conquer the Kongu country in the latter part of the ninth century (*Castes and Tribes*, Vol. III, p. 394).

# நூற்குறிப்பு

கோவை மருத்துவ மையம் - மருத்துவமனைத் தலைவரும், கோவை உலகத் தமிழ்ப் பண்பாட்டு மைய நிறுவனரும், தலைவருமாகிய திருமிகு. டாக்டர் நல்ல. **ஜி. பழனிசாமி** அவர்களின் பொருட்கொடையால் இந்நூல் வெளியிடப்படுகிறது. அவருக்கு எங்கள் இதயங்கனிந்த நன்றி உரியதாகுக.

| | |
|---|---|
| நூலின் பெயர் | **குருகுல காவியம்** |
| நூல் பொருள் | சமூக வரலாறு |
| ஆசிரியர் | **கவிராச பண்டிதர்** |
| பதிப்பாசிரியர் | **புலவர் செ.இராசு** |
| நூல் உரிமை | பதிப்பாசிரியர்க்கு |
| பதிப்பு ஆண்டு | 2018 |
| நூலின் அளவு | 14 செ.மீ. X 21 செ.மீ. |
| பக்கங்கள் | 92 |
| அச்சு எழுத்து | 11 புள்ளி |
| விலை | ரூ. 80/- |
| நூல் கிடைக்குமிடம் : | **கொங்கு ஆய்வு மையம்**<br>58/2 பாலக்காட்டுத் தோட்டம்<br>புதிய ஆசிரியர் குடியிருப்பு வழி<br>ஈரோடு-638 011. போன் : 0424 2262664<br>செல் : 9500938384, 9790038380 |
| நூல் - அட்டை வடிவமைப்பு | **வாழ்க வளமுடன் ஆப்செட் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்**<br>29 நாச்சியப்பா வீதி, ஈரோடு - 638 001.<br>போன் : 0424-2258511, 2258522 |


---

முன் அட்டை : கண்ணப்ப நாயனார் செப்புப் படிமம்

பின் அட்டை : காளத்தி ஈசுவரன் கோயில் (உள் தோற்றம்)



உமாபதி பண்டித குருசுவாமிகள் மடம்
குருகுலர் சமூக குலகுரு
சிவஸ்ரீ O.P. **கணேச குருக்கள்**
நன்செய் இடையாறு - 638 182.
செல் : 94435 95898
96986 89704

# வாழ்த்துரை

கவிராச பண்டிதரால் 'குருகுல காவியம்' எனும் தலைப்பில் இயற்றப்பட்ட இந்நூலில் உள்ள சந்திரதுண்டம் என்னும் பகுதி மறையவர்களால் குருகுலத்தவர்க்கு குலகுருவாக விளங்கும் உமாபதிசிவம் அவர்களின் விருப்பப்படி உரிமையாகத் தாரை வார்த்துக் கொடுக்கப்பட்டுள்ளதை அறிந்து மிகவும் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். தமிழ்மொழியைத் தாய்மொழியாகக் கொண்டுள்ள தமிழர்கள் அனைவருமே இந்நூலைப் படித்துப் பயன்பெற வேண்டும். இந்நூலைப் பதிப்பித்த பதிப்பாசிரியர் தஞ்சாவூர் தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் கல்வெட்டு - தொல்லியல் துறையின் முன்னாள் தலைவர் புலவர் செ.இராசு அவர்கள் இக் காவியத்தில் மூன்று வரலாற்று நிகழ்ச்சிகளைத் தகுந்த கல்வெட்டுகளின் மூலமாகவும், ஓலைச் சுவடிகளின் மூலமாகவும் கண்டறியப்பட்டு விளக்கியுள்ளார். மேலும் இக்காவிய நூலில் சொற்சுவையும் பொருட்சுவையும் தவழ்ந்து விளையாடியுள்ளதை அறிய முடிகிறது.

மூன்று வரலாற்று நிகழ்ச்சிகள்

1. கொங்கு 24 நாடுகளையும் ஆட்சி செய்த வில்லவன் ஆகிய சேரன் நாடாட்சி செய்த போது நடந்த நிகழ்வுகள்.

2. திருவாரூர் சுந்தர மூர்த்தி நாயனார் கொங்கு நாட்டை கற்றறிந்த அந்தணர்கள் ஏழு பேருக்கு ஆட்சி செய்யும் உரிமை அளித்த விதமும், நடைபெற்ற நிகழ்வுகளும்.

3. அந்தணர்கள் கொங்கு நாட்டை ஆட்சி செய்த போது சேரன் காளத்தி மன்னனிடம் முன்பு உதவி கேட்டது போலவே மீண்டும் காளத்தி சென்று கண்ணப்பர் வழிவந்த குருகுல மன்னன் முத்தணி ராசனின் உதவியுடன் கள்ளர்களாகிய பகைவர்களை

வென்று மீண்டும் கொங்கு நாட்டை அந்தணர்கள் ஆட்சி செய்த விபரங்களாகிய நிகழ்வுகள்.

குருகுல சமுதாயத்தில் உள்ள 5 பிரிவுகளை 'அஞ்சு சாதி வரலாறு' என்று கூறுகிறது புரவிபாளையத்தின் வேட்டுவர் சமூக வரலாறு கூறும் ஆவணம். ஐந்து பெரும் பிரிவுகட்கும் உண்டான பெயர்,

1. வேட்டுவர் 2. காவலர் 3. பூவலர் 4. மாவலர் 5. வேடர் என்ற மரபுவரிசை இந்நூலில் வரலாற்று அடிப்படையில் கூறப்பட்டுள்ளது. கண்ணப்பர் வரலாறு சேக்கிழரால் இயற்றப்பட்ட பெரியபுராணத் தோடு ஒப்பிட்டுப் பார்க்கும் விதமாக பல பாடல்களில் மிக விரிவாகத் தரப்பட்டுள்ளது. மேலும் இந்நூலின் வரலாறு நிகழ்ந்த இடங்கள், மூன்று மடங்கள், மற்றும் சைவசமய குரவர்கள் நால்வரில் முக்கிய இடம் பெறும் சுந்தரர் வரலாறும் கூறப்பட்டுள்ளது. மேலும் குருவுக்கு வேண்டுகோளும், குருவிற்கு அளிக்க வேண்டிய காணிக்கையைப் பற்றியும், வேட்டுவர் சமூகக் குலதெய்வத்தைப் பற்றியும் மிகவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

''ஆறிரண்டும் காவேரி அதன் நடுவே ஸ்ரீரங்கம்'' என்பதைப் போன்றே இக் காவியத்தில் வரலாறு நிகழ்ந்த இடம் வடக்கே திருமணிமுத்தாறும் தெற்கே காவிரியாறும் நடுவே நன்செய் இடையாறும் வயல்களால் சூழப்பட்ட ஊர் என்று கூட குறிப்பிடலாம்.

வாழ்த்துரை வழங்கும் எனது அன்பான வேண்டுகோள், இக்குருகுல காவிய நூலை அனைவரும் மனம் ஒன்றி உள்ளம் உருகி படித்திட, இக்குருகுல காவிய நூலின் பயனாக இறைவனருளால் இந்திர பதவி பெற்று இருப்பர். நீடூழி வாழ்வர் என்பது உறுதி. என்றென்றும் சந்ததியினர் தழைத்து நாளும் வாழ்வர் இத்தரணியில் வேந்தராகி.

நம் வேட்டுவ குல மக்களுக்கு நல்ஆசி வழங்கி குலமக்கள் காணிக்கை, மாங்கல்ய காணிக்கை மூலம் வேளாண்மையில் முதன்மை தானியங்கள் பெற்று வேட்டுவ குலமக்கள் 16 செல்வங்களுடன் மேன்மை பெறவும், எல்லாம் வல்ல பூஜா மூர்த்தியாகிய ஞானாம்பிகை உடனமர் காளகஸ்தீஸ்வரர், முதன்மை குரு உமாபதி பண்டிதர் குருவருளும் திருவருளும் துணை செய்ய

வாழ்த்தி ஆசீர்வதிக்கின்றேன்.
மிக்க அன்புடன்
**O.P. கணேச குருக்கள்**

டாக்டர் **சி.மயிலேறு ரவீந்திரன்**
70, டாக்டர்ஸ் லே அவுட்
சம்பத் நகர், ஈரோடு - 638 011.

செல் : 98943 79197
99944 91910
0424 2261875

# அணிந்துரை

'குருகுல காவியம்' வேட்டுவர் சமூக வரலாற்றுப் பெருமையைச் சிறந்த கவிதைகளால் கூறும் நூல். இதனை இயற்றிய புலவர் கவிராச பண்டிதர். பெயரளவில் அறியப் பெற்றிருந்த இக் காவியத்தின் ஓலைச் சுவடியைக் கண்டறிந்து புத்தகமாகப் பதிவேற்றம் செய்தவர் புலவர் செ.இராசு ஆவார்.

புலவர் பெருமகனார் திரு.இராசு அவர்களின் இப் புண்ணியச் செயலை எப்படிப் பாராட்டுவது என்று வார்த்தைகள் கிடைக்க வில்லை. அதனால் அவரை வணங்கி வாழ்த்துகிறேன். ஏற்கனவே வேட்டுவர் சமூகத்திற்கு உரிய கல்வெட்டு, செப்பேடு அடங்கிய வரலாற்று ஆவணங்களையும், ஒப்புயர்வற்ற அப்பச்சிமார் காவியத்தையும் தந்த பெருமைக்கு உரியவர் அவர்.

தமிழ் மன்னர் மூவேந்தருக்கும் துணையாக வந்து குருகுல மன்னர் எதிரிகளை விரட்டிய வீர வரலாற்றை, கண்ணப்ப நாயனார் வழிவந்த முத்தணிராசன் படைகளை அனுப்பிக் கொங்கு மன்னர்க்குச் செய்த உதவியை அழகுத் தமிழில் அற்புதமாகக் கவிபாடி வந்த தேனமுது குருகுல காவியம்.

அந்த வீர வரலாற்றைத் தமிழ் மக்கள் அனைவரிடமும் சென்று சேர்க்க வேண்டும் என்ற புலவர் இராசுவின் தணியாத தாகத்தைத் தீர்க்கும் வண்ணம் நூல் பதிப்பிக்க உதவிய கோவை மருத்துவமனைத் தலைவர் டாக்டர் நல்ல. பழனிசாமி அவர்களின், புனிதப் பணியை தமிழ் கூறும் நல்லுலகம் என்றும் உயர்த்தி நிற்கும். அது உறுதி.

இக்குருகுல காவியத்தைத் தமிழ் அறிந்தோர் அனைவரும் பெற்று 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற புறநானூற்றுப் புலவர் கணியன் பூங்குன்றனார் வரிக்கு மெய்ப்பட வேண்டும்.

ஈரோடு
6.8.2018

அன்புடன்
மயிலேறு ரவீந்திரன்

# கவிராச பண்டிதர் இயற்றிய
# குருகுல காவியம்

## முன்னுரை

குருகுல காவியம், குருகுல சமுதாயத்தின் பூர்வ வரலாறு கூறும் ஒரு ஒப்புயர்வற்ற நூல். இந்நூலை 206 பாடல்களில் பெரும் புலவரும், பிரமாதிராயர் என்று பட்டப்பெயர் பெற்றவருமான கவிராச பண்டிதர் 'குருகுலச்சனர் புகழ்கூறத்' தாம் இயற்றியதாகக் காப்புச் செய்யுளிலேயே கூறியுள்ளார். இந்நூல் 'செந்தமிழ்' என்றும் 'நற்கவி' என்றும் புகழ்ந்து போற்றப்பட்டுள்ளது.

இக் காவியத்தில் மூன்று வரலாற்று நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன.

1. கொங்கு 24 நாடுகளையும் ஆட்சி செய்த வில்லவன் ஆகிய சேரன் நாடாட்சி செய்ய விருப்பம் இல்லாமல் தன் மனைவியுடன் கயிலை சென்று சிவபெருமானின் திருப்பாதங்களை வணங்கிக் கயிலையில் தங்க விரும்புகிறான். அந்த எண்ணம் திருவாரூர் சுந்தர மூர்த்தி நாயனாரால் நிறைவேறுகிறது. சேரன் கொங்கு நாட்டைச் சுந்தரருக்கே உரிமையாகத் தாரை வார்த்துக் கொடுத்து விட்டான்.

சுந்தர மூர்த்தி நாயனார் வெள்ளை யானையில் கயிலை சென்றபோது சேரமான் பெருமாளும் தன் குதிரையில் உடன் கயிலை சென்றார் என்பது சைவசமய மரபு. பெரிய புராணத்திலும் இச் செய்தி கூறப்பட்டுள்ளது. இதனை அடிப்படையாகச் கொண்டே வில்லவன் (சேரன்) கயிலை சென்ற இவ்வரலாறு கூறப்பட்டிருக்கலாம்.

2. சுந்தரர் கொங்கு நாட்டை மறையவர்களான அந்தணர் ஏழு பேருக்கு ஆட்சி உரிமையாக அளித்தார். மறையவர்கள் ஆட்சி செய்யும்போது செல்வம் மிகுந்த வைசியர்களையும் சேர்த்துக் கொள்கின்றனர். அந்நிலையில் விராடர், கள்ளர் போன்ற ஆற்றல் மிக்கவர்கள் கொங்கு நாட்டில் ஆதிக்கம் செலுத்த முற்படுகின்றனர். மறையவர்கள் சுந்தரர் உதவியை நாட அவர் முன்பு மூவேந்தர் ஆட்சிக் காலத்தில் ஒட்டியர், சல்லியர் இடையூறு வர பொத்தப்பி நாட்டுக் குருகுலத் தலைவரால் கொங்கு நாட்டை ஆண்ட சேரர் சல்லியர், ஒட்டியரை வென்றார். ஆதலால் இப்போதும் பொத்தப்பி நாட்டுத் தலைவர்களை நாடுங்கள் என்று சுந்தரர் அறிவுரை கூறுகின்றார். முன்பு ஒட்டியர், சல்லியரை அழிக்க மூவேந்தரும் கேட்கச் சேரனுக்கு உதவியவர் கண்ணப்பர்.

பல ஆவணங்கள் செட்டியும் சிவப்பிராமணரும் கொங்கு நாட்டில் நிர்வாகம் செய்ததாகக் கூறுகின்றன.

தென்னிலைச் செப்பேடுகள், ஆத்தூர்ச் செப்பேடு, கரூர் அருங்காட்சியகச் செப்பேடு ஆகியவற்றில் பல இடங்களில் கொங்கு ஆட்சியாளர்களாக,

'சேரன் சோழன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணாள் நாளில்' என்று கூறப்பட்டுள்ளது

மெக்கன்சி ஆவணங்கள் சிலவற்றில் "பூர்வத்தில் பாண்டியராசா நாளையில் இந்த சீமையில் செட்டி சிவப்பிராமணாள் காணியாளர் களாக இருந்தார்கள்" என்று கூறப்பட்டுள்ளது.

கொங்கு ஆவணங்கள் சிலவற்றில் செட்டி, சிவப் பிராமணரிடம் வேளாளர்கள் காணி உரிமை வாங்கியது கூறப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

3. மறையவர்கள் சேரன் காளத்தி மன்னனிடம் முன்பு உதவி கேட்டது போல மீண்டும் காளத்தி சென்று கண்ணப்பர் வழிவந்த

குருகுல மன்னர் முத்தணிராசனை உதவிக்கு வந்து விராடர், கள்ளரை விரட்டி கொங்கு நாட்டை எங்களுக்கு அளிக்க வேண்டும் என்று வேண்டினர்.

குருகுல சமூக மன்னன் முத்தணி ராசனும் குலகுரு உமாபதி தேசிகர் விருப்பப்படி ஐந்து பிரிவு குருகுலருடன் கொங்கு நாடு வந்து கள்ளர்களைப் போர் செய்து விரட்டிய செய்தி மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இந்த உதவியின் பொருட்டுக் கொங்கு நாட்டில் 'சந்திர துண்டம்' என்னும் பகுதி மறையவர்களால் குருகுலத்தவர்க்கு குலகுரு உமாபதிசிவம் விருப்பப்படி உரிமையாகத் தாரை வார்த்துக் கொடுக்கப்படுகிறது. சந்திர துண்டம் என்ற பகுதி திங்களூராக இருக்கக் கூடும். துண்டம் என்பது சிறு நிலப்பகுதியைக் குறிக்கும். ஈரோட்டுக் கல்வெட்டில் 'காஞ்சித்துண்டம்' என்ற பெயர் வருகிறது. திங்களூர்க் கல்வெட்டுகள் திங்களூரை சந்திரவசதி, சந்திரபுரி என்று கூறுகிறது. இக்காவியத்தில் காளத்தி குருகுல மன்னர் முத்தணி ராசன் குருகுல சமுதாயத்தின்

'வேட்டுவர் வேடர் விறல்மிகு பூவலர்
துட்டரை வெல்லும் துய்ய காவலர்
மாவல ருடனே வகுத்தஅஞ்சு குலத்தார்'

ஆகிய அனைவருடனும் வந்து பகைவரை வென்று கொங்கு நாட்டை மீண்டும் மறையவர்க்கு அளித்த செய்தி விரிவாகக் கூறப்படுகிறது. இதனால் தான் ஆசிரியர் பாயிரத்தில்

''வள்ளல் முத்தணி ராசன் கொங்கு
வய்யகம் தன்னில் மாற்றலரை
தெள்ளி மையுடன் வென்றரசு
செய்த காவியம்''

என்று இந்நூலைக் குறிப்பிடுகிறார் (பாயிரம்11).

மெக்கன்சி தொகுப்பில் கொங்கு மண்டல வேட்டுவப் பட்டக்காரர்கள் தொடர்பான ஆவணங்களில் காளத்தி மன்னன்

முத்தணிராசன் கொங்குப் படையெடுப்பை ஒத்த நிகழ்ச்சி கூறப்பட்டுள்ளது.

''பூற்வத்தில் பாண்டியறாசா நாளையில் இந்த சீமையில் செட்டி, சிவபிறாமணாள் காணியாளற்களாஇ யிருந்தார்கள். அக்காலத்தில் ஒட்டிய நெண்ணப்பட்டவன் மேற்படி செட்டி சிவபிறாமணாளை கஸ்டப்படுத்தினபடியிநாலே அந்த அங்காமிக்கு பொறுக்கமாட்டாமல் கஷ்டப்பட்டு உத்திரதேசத்துக்கு போனாற்கள்.

அக்காலத்தில் உத்திரதேசமான காளஹஸ்தி பிறதேசத்தில் ஸ்ரீகாளஅஸ்தீஸ்வரனுடைய அனுகிறஹத்துநாலே கண்ணப் பனுடையர் யெங்குற சிவபக்தனுடைய வம்சத்தில் வேட்டுவ சாதியென்று முத்துறாசாக்கள் யென்று பேற் பிறசித்தி பட்டவர்களாஇ றாட்சியாதிகாரம் பண்ணிக்கொண்டு வரும் நாளையில் மேற்படி பிறதேசத்தில் காறியகற்தனாகிய சக்கிறபாணி றாசரிடத்தில் வந்து செட்டி சிவபிறாமணர்கள் பட்ட சிறமங்கள் யெல்லாம் சொல்லிக் கொண்டு ஒட்டியனை அடக்கி போட்டு யெங்களைக் குடிநிலைக்க பண்ண வேணுமென்று சொல்லிக் கொண்டாற்கள்.

அதற்கு சக்கிறபாணி றாசா சொன்னது; ஒங்கள் தேசாதிபதியான பாண்டியறாசா அவற்கள் யிடத்தில் சொல்லி கேளுங்கோள் யென்றும், ஒட்டியன் அவாளுடைய மனுஷ நானபடியிநாலே அவாள் அடக்கி ஒங்களை குடிநிலைக்க பண்ணுவாற்கள் யென்றும், அப்படிக்கு அவாள் மனுஷ்யராலே ஆகாமல் போனால், பாண்டியறாசா யெங்களுக்கு யெளுதி அனுப்பிவிச்சால் நாங்கள் யெங்கள் மனுஷாளெ அனுப்பிவிச்சு ஜெயம் பண்ணிவிச்சு குடுக்குரோமென்று சொன்னாற்கள்.

செட்டி சிவபிறாமணாள் மறுபடி பாண்டிய றாசா அவர்கள் யிடத்தில் வந்து சேற்ந்து ஒட்டியனை சம்ஹாரம் பண்ணுகுறதற்கு

காளஹஸ்தி பிறதேசத்து முத்து றாசாக்களை தறுவிக்க வேணுமென்று சொல்லி கொண்டபடியிநாலே, பாண்டிய றாஜா அவர்கள் அந்த ஒட்டியனை சம்ஹாரம் பண்ணப்பட்டவருக்கு அந்த சீமையை குடுப்பிவிக்குரோமென்று காளஹஸ்தி பிறதேசத்துக்கு சக்கிறபாணி றாசா அவற்களுக்கு யெழுதி அனுப்பிவிச்சாற்கள்.

அந்த சமயத்தில் சக்கிறபாணி றாசா அவர்கள், முத்து றாசாக்கள் கூட்டத்தில் யெளுவது தண்டிகைக்காறர்களை தெற்கு பிறதேசத்துக்குப் போகும்படியாக நேமுகம் செயிதாற்கள்.

காளஹஸ்தி பிறதேசம் விட்டு யெளுவது தண்டிகை காறர்களும் பிறப்பட்டு, தெற்கு னோக்கி பாண்டிய றாசா அவற்கள் பேட்டி பண்ணி கொண்டு, ஜயபேறி வாங்கி கொண்டு ஒட்டியனெ யுத்தம் பண்ணி ஜயம் பண்ணின படியினாலே யெளுவது தண்டிகைக் காறர்களுக்கும் அவாளவாளுக்கு அத்து பிறிச்சு கிறாமங்களை விட்டாற்கள்.''

இந்த ஆவணத்தில் முத்தணிராசன் முத்துராசா என்று கூறப்படுகிறார்.

### *ஐந்து பிரிவின் காரணப்பெயர்*

குருகுல சமுதாயத்தில் வேட்டுவர், வேடர், காவலர், பூவலர் மாவலர் என்ற 5 பிரிவுகள் கூறப்படுகிறது. புரவிபாளையம் பாளையத்தின் வேட்டுவர் சமூக வரலாறு கூறும் ஆவணம் ''அஞ்சு சாதி வரலாறு'' என்றே கூறப்படுகிறது.

குருகுலர் ஐந்து பிரிவின் வரலாறு கூறும் மற்றொரு இலக்கியம் 'பஞ்சவர்ண ராஜ காவியம்' என்பதாகும்.

இந்த ஐந்து பெரும் பிரிவுகட்கும் பெயர்க் காரணத்தை நூலாசிரியர் கூறுகின்றார்.

## *வேட்டுவர்*

குருகுல வேந்தன் காளத்தி மன்னன் வேட்டைக்குப் போகும் போது ஒரு பெண்ணைக் கண்டு அவளை மணம் செய்துகொள்ள விரும்பினான். அதை ஏற்றுக் கொள்ளாத பெண்ணின் தந்தை திட்டன் காளத்தி மன்னனோடு போர் செய்ய வந்தான். காளத்தி மன்னன் 'வெட்டுவன்' என்று கூறி திட்டனை இரு கூறாக்கி அப் பெண்ணை மணம்செய்து கொண்டான். இதைக் கண்ட வானோர், முனிவர், அரசர் மகிழ்ந்து காளத்தி மன்னனுக்கு வேட்டுவன் என்று பெயர் தந்தனர்.

''திட்டன்அவ் அமரில் வெல்ல தீரன்கா ளத்தி மன்னன்
வெட்டுவன் என்று சீறி வீசியே இருகூ றாக்கி
மட்டில்லாக் குழலினாளை வதுவையங்கு இயற்றி ஆர்த்துத்
துட்டகண் டகன்என்று ஓங்க துலங்கவாழ்ந் திருந்த தாலே

ஆரண முனிவர் வானோர் அரசரும் உவகையோடு
வீரன்என்று உள்ளி என்றும் வேட்டுவன் எனப்பேர் தந்தார்''

என்பது காவியத் தொடர்கள் (131,132). இவர் வழியினரே வேட்டுவர்.

## *காவலர்*

வசு என்னும் குருகுல மன்னனிடம் உதங்கர் என்னும் முனிவர் தன் வேள்விக்குக் காவலாக இருக்க வேண்டினார். மிக அரிதின் முயன்று இரவுபகல் ஊண் உறக்கமின்றி வசு வேள்வியைக் காத்தார். காவல் காத்த சிறப்பால் உதங்கர் வசுவிற்குக் 'காவலன்' என்று பெயரிட்டார்.

''வேள்வியைக் காத்த லாலே வேந்தர் காவலன் நீயென்று
தாழ்வில்லா அருள் அளித்து தவமுனி இருந்தார் ஆங்கே
கோளரி யனைய வேந்தன் குவலயம் துதிக்க வாழ்ந்தான்
மீளவும் மரபுள் ளார்கள் மிக்க காவலராம் கண்டீர்''

என்பது காவியப்பாடல் (139). இவர் வழியினரே காவலர்.

## *பூவலர்*

ஈழதேசத்து மன்னன் ஒருவன் குதிரை மீதேறி பூவலம் வந்தான். மன்னனையும் குதிரையையும் சயந்தன் என்ற குருகுல மன்னன் வென்று பூவலன் என்று பெயர் பெற்றான்.

''எப்புவ னத்து மேலாம் ஈழதே சத்து மன்னன்
பொற்புர வியன்மீ தேறிப் பூவலம் வந்த தாலே
அப்புர வியும்அழித்து அவனியுள் ளளவும் தானே

பூவலன் எனப்பேர் கொடுத்தருளி பூஷண வகைகளும் பொருந்தி
யாவரும் மகிழ்ந்து அரசனும் அனுப்ப அவனுமே பார்தனில் மேவி
ஓவியம் போலும் ஒண்டொடி யாளை உவந்தவன் வதுவையங் கியற்றி
ஆவலாய் ஈன்ற மரபின ரெல்லாம் அவனியில் பூவலர் ஆச்சே''

என்பது காவியப்பாடல் ( 140,141). இவர் வழியினரே பூவலர்.

## *மாவலர்*

குருகுல மரபில் நகுலன், அணிலன் இருவரும் துங்கபத்திரை நதி அருகே மாவலன் மரபில் வந்த மணிமாலனின் இரு மகளிரைக் கண்டு மணம் செய்ய விரும்பினர். மணிமாலன் தன் மகளிர் வயிற்றில் பிறந்தோர் மாவலர் குலமாகச் சிவன் வரம் கொடுத்தார் என்றார். ஒப்புக் கொண்டு திருமணம் செய்தனர். பிறந்த ஏழு மக்களும் வழியினரும் மாவலர் எனப்பட்டனர்.

''நல்லதென்று அவர்தாம் உரைத்து நங்கைமார் இருவோர்களையும்
வல்ல குருகுலர் இருவருமாய் வதுவை செய்துஅவர் வாழுகையில்
மெல்லியர்கள் இருவோர்களுக்கும் மேன்மையான குலத்துதித்த
சொல்லும் மாவலன் குலம்விளங்க தோன்றினர்ஏழு மைந்தர்களும்''

என்பது காவியப்பாடல் (145). இவர்கள் வழியினரே மாவலர்.

## *வேடர்*

வேடர் குலப் பெண்களை மணம் செய்துகொண்ட குரு குல மன்னர் ஐவரின் குலம் பெருகி வேடர் எனப்பட்டனர்.

''மற்ற ஐவரும் வேடர்குல மாதர் தம்மை மணம்புரிந்து
சுற்ற மோடவர் வாழ்ந்திருந்தார் துய்ய வேடர் குலம்விளங்க
வெற்றி யுள்ள குருகுலத்தின் வேந்தர் மரபில் உதித்தவர்கள்
தோற்றும் ஐந்து குலமிதென்ன சொன்னான் குருகுல வேந்தனுமே, ''

என்பது காவியப்பாடல் (146).

***மரபு வரிசை***

மறையவர் கேட்க முத்தணிராசன் பூர்வீகக் குருகுல மரபை மிகவும் விரிவாக முப்பது பாடல்களில் சொல்வது கூறப்படுகிறது. குறிப்பாக புராண மரபு முதலில் கூறப்படுகிறது.

இயக்க ராசன்
|
சூரன்
|
நாகன்
|
திண்ணன் (கண்ணப்பன்)
|
விசயன்
|
காளத்தி மன்னன்
|
அரணியமன்னன்
|
முத்தணிராசன்
|
காளத்திமன்னன்

என்று ஒரு வரலாற்று மரபும் கூறப்படுகிறது.

***கண்ணப்பர்***

கண்ணப்பர் வரலாறு பல பாடல்களில் மிக விரிவாகக் கூறப்படுகிறது. பெரிய புராணத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க அவை இங்கே தரப்படுகிறது.

''மொழியும் குருகுலர் பதின்மர்இந்த
உதிரத்தவன் நாக மன்னன்
வளமை யாய்இவன் பயின்றெடுத்த
மன்னன் திண்ணிய மகிபாலன்

காவ னத்தினில் வேட்டைவர
காளத்தி ஈசர் தனைத்தொழுது
நாவில் சுவையுள்ள இறைச்சிகளை
நான்தரு வன்என் றேயிறைஞ்சி
மூவி ரண்டாந் தினந்தனிலே
முறையே அரன்பூசை செய்யவென்று
ஆவ லாய்ச்சுவை இறைச்சிகளை
அவன் அருந்திய சேசங்களும்

உச்சிக் கொண்டையில் எருக்கலம்பூ
உமிழும் வாயில் கெங்காசலம்
கைச்சி லையும் இறைச்சியுடன்
காலில் மிதியடித் தோலுடனே
நச்ச ராவணி ஈசருடை
நல்கு மாளிகை அருகில்வந்து
முச்சக்க தாளி னால்உதைக்க
முன்க பாடம் திறந்தனவே

வாச மலர்தாளி னால்விலக்கி
வாயில் நீர்வர மீதில்விட்டு
நேச முடன்சிரப் பூஅளித்து
நீட்டி னான்கை இறைச்சியென்றான்
ஆசை யுடன்அவர் ஊன்அருந்த
அரனார்க்கு ஒருகண் ஒழுகினவால்
மோச மென்றொரு கண்பிடுங்கி
முன்பு திண்ணன் அமைத்தனனால்

மற்றும் ஒருகண் இழிந்துவர
வல்லவன் ஒருகண் தான்பிடுங்க
நிற்றி யென்றான் மெய்மகிழ்ந்து
நேச முடனவர் மீதணைத்து
இற்றை உனதன்புக்கு அகமகிழ்ந்தோம்
எனது கண்ணப்பன் என்றுதழுவி
கொற்ற கோசரிக்கு இதுகூறி
குன்ற வில்லி மகிழ்ந்தனனால்

இன்ன தன்மையி னால்திண்ணன்
இனிய கண்ணப்பன் எனஆனான்''

என்பது காவியப்பாடல் (124-129). கண்ணப்பன் மகன் விசயன், பேரன் காளத்தி மன்னன் என்று கூறப்படுகிறது.

### *வரலாறு நிகழ் இடங்கள்*

ஆத்தூர், இடையாறு, இராசிபுரம், கஞ்சமலை, கருவூர், காப்பிரிமலை, காளத்தி, சங்ககிரி, சந்திரதுண்டம், சிதம்பரம், சேலம், திருச்செங்கோடு, திருப்பதி, திருவண்ணாமலை, திருவாரூர், நாமக்கல், பரமத்தி, பாலமேடு, வெள்ளாறு.

காவிரியாறும் மணிமுத்தா நதியும் பல இடங்களில் குறிக்கப்படுகின்றன.

### *மூன்று மடங்கள்*

குருகுலர்களின் குலகுரு உமாபதி தேசிகர் காளத்தியில் இருந்தார். அவருக்கு இடையாற்றில் ஒரு புதிய அழகிய மடம் கட்டிக் கொடுக்கப்பட்டது. காவிரி - மணிமுத்தாறு நதிகளின் இடையில் இருக்கும் அவ்வூர் இடையாறு எனப்பட்டது. அருகில் காவிரியும் திருமணி முத்தாறும் சேருமிடம் 'சங்குமுகம்' எனப்படும். அங்கு நீராடி குலகுரு தவமும் பூசையும் மேற்கொள்வார். மடத்திற்குக் காவலும் போடப் பட்டது.

உமாபதி தேசிகர் பயணம் செய்யும் பல்லக்கை ஆட்கள் தூக்க மாட்டார்கள். முன்னர் 'பொன்னழகி' என்னும் துர்க்கையும், பின்னர்

கூளிப்பேய்களும் தூக்குவர். கருப்பன் காவல்காரன். இடும்பன் குடை பிடிப்பவன்.

இடையாற்றின் வடகிழக்கில் பொன்னழகி துர்க்கையையும், தென்மேற்கில் கருப்பனையும், வடக்கில் இடும்பனையும் எழுந்தருளி அடியார்க்கு அருளுமாறு உமாபதி தேசிகர் வேண்டிக் கொண்டார்.

பிற்காலத்தில் கல்வெட்டு இடையாறையை ''வடகரை ராசாச்சிரய வளநாட்டு இடையாற்றுச் சூழல் பிரமதேயம் இராசேந்திர சிங்கச் சதுர்வேதமங்கலம்'' என்று கூறுகிறது.

இந்த மடத்தை ஏற்படுத்தியது காளத்தி மன்னர் குருகுல முத்தணிராசன். உமாபதி தேசிகர் தம்பி கோசிகன் என்பாருக்கு வெள்ளாற்றில் மடம் கட்டித் தங்க வைத்தனர். கஞ்சமலையில் ஒரு மடம் இருந்தது. தவராசபண்டிதர் என்பவர் அங்கு இருந்தார். இந்த மூன்று மடங்களும் குருகுலர்கட்கு உரியவை.

### *சுந்தரர்*

குருகுலர் வரலாற்றுக் காவியத்தில் சுந்தரர் முக்கிய இடம் பெறுகிறார். திருவாரூர் பரவையார் வீட்டில் அவர் இருந்ததாகக் கூறப்படுகிறது.

> ''ஐம்பொன் மாளிகை அபரஞ்சி மேடையில்
> செம்பொன் கம்பளி சிறப்பாக விரித்து
> மதன உல்லாச மங்கைய ருடனே
> சதுரங்கம் ஆடித் தயவாய் இருந்தார்''

என்பது காவியப்பாடல் (18).

ஆரூர் தன்னில் அரனடி பணியும் சுந்தரர், வேதியர், மறையவர், அந்தணர் என்று குறிக்கப்படுகிறார்.

### *குருவுக்கு வேண்டுகோளும் காணிக்கையும்*

குலகுரு இடையாற்றில் இருந்தாலும் வருடம் ஒரு முறை அடியார்க்கு அருள்புரிய சாரி (சஞ்சாரம்) வரவேண்டும் என்று வேண்டுகோள் விடப்பட்டது. தண்டிகை ஏறுவோர் வருடம் 500

பொன்னும், யானையில் வருவோர் 200 பொன்னும், தக்கவர்கள் 100 பொன்னும், வீட்டுக்கு 20 பொன்னும், திருமணத்திற்குப் பத்துப் பொன்னும் தவறாமல் காணிக்கையாகக் கொடுப்போம் என்று குருகுலர் கூறினர்.

## *குலதெய்வம்*

குலகுரு உமாபதி தேசிகர் பல்லக்கை முன்பு தூக்கிய 'பொன்னழகி' என்னும் துர்க்கை குருகுல வேட்டுவரின் குலதெய்வம் என்றும், அத்துர்க்கைக்குப் பாலன்னம் படைக்க வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது.

தொன்மை வரலாறு கூறும் இச் சிறப்புமிகு 'குருகுல காவியம்' முதல் முறையாக ஓலைச் சுவடியிலிருந்து பெயர்த்து எழுதப்பட்டு அச்சாகிறது.

அப்பச்சிமார் காவியம், குருகுல காவியம் இரண்டும் மிகச்சிறந்த கொங்கு இலக்கியங்கள். வரலாற்றுச் சிறப்பு மிக்கவை. வேட்டுவர் சமுதாயத்தினர் மட்டுமல்ல தமிழ் இலக்கிய ஆர்வலர்கள் அனைவரும் இந்நூல்களைப் பெற்றுப் படித்துப் பாதுகாப்பார்களாக.

அப்பச்சிமார் காவியம் ஏற்கனவே சமுதாய, வரலாற்று ஆர்வலர் ஈரோடு டாக்டர் சி. மயிலேறு இரவீந்திரன் அவர்களால் அச்சிடப்பட்டு மறுபதிப்பும் செய்யப்பட்டுள்ளது.

இந்நூல் பதிப்பிற்குப் பொருள் உதவி செய்த திரு. டாக்டர் நல்ல ஜி. பழனிசாமி அவர்கட்கும், வாழ்த்துரை வழங்கிய குலகுரு திரு.ஓ.பி. கணேச குருக்கள் அவர்கட்கும், அணிந்துரை வழங்கிய திரு. டாக்டர் சி. மயிலேறு ரவீந்திரன் அவர்கட்கும் நெஞ்சார்ந்த நன்றி உரியதாகுக.

இந்நூலை வடிவமைத்து அச்சிட்ட வாழ்க வளமுடன் ஆப்செட் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடட் அச்சகத்தார்க்கு என் நன்றி.

ஈரோடு — அன்பன்

15.08.2018 — **செ.இராசு**

# குருகுல காவியம்

## *காப்பு*

பொற்புயர் நாகக்குன்றில் பொற்புரு கோனைப்போற்றி
பொற்குரு குலச்சன ரைப்புகழ -பொற்புக்
கருணிசிக ரக்கடவுள் காந்திதிகழ் செல்வக்
கருணிசிக ரக்கடவுள் காப்பு.

## *பாயிரம்*

### *திருச்செங்கோட்டு இறைவர் துதி*

1. பூவாழி யெயும்விறலோன் நம்மை கொண்கன்
புதல்வனைவெள் கவேவிரைந்து புரையில் ஆய்தற்
பூவாழி யங்கியமூ துணர்வு கண்ட
புலவனையும் வேண்டியென்றும் புகழி லாய்ந்த
பூவாழிக் கவிஞனையும் போற்றி நன்றிப்
புகழ்கவிக்க உறுதிநல்கிப் பெருகச் சேம
பூவாழி யற்பதிப்பொன் உரகக் குன்றில்
பொருந்தியொன்றாய் நிறைபதத்தைத் தினம்து திப்பாம்.

2. மாலையுரு மன்வருணத் தெழில்பெ ருஞ்சீர்
வயங்குதண்பன் னகப்பொருப்பில் வைகும் திவ்ய
மாலைபிறங் குதலுடனே இணைந்தோன் தன்தாள்
மனத்தில்வைத்துக் காவியத்தின் பொருள்வ குப்ப
மாலைமன்ன லருகாமற் சுகங்கள் தோய்ந்து
மேதினியில் அனைவோரும் வளர்ந்து லாவ
மாலைசிறந் தேதுலங்க என்றும் மேன்மை
மாறாமல் மதுரமொழி இயம்புங் காலே.

3. செங்குன்றை யம்பதியில் செய்ய குகனடியை
இங்கிதத்தி லேவழுத்தி ஏந்துபுகழ் - தங்கநிலை
உற்றதக்கைச் சீரால் உறுகா வியம்பண்ண
கொற்றகவி ஞோரைக் குறித்து.

### *அர்த்தநாரீசர், முருகன், பண்டிதர்*

4. சற்பவெற்பில் உற்றுறையும் சண்மகன்தன் தந்தையென
நிற்பன்அர்த்த நாரீசன் நீதியாய் - சொற்பிறங்கச்
செந்தமிழைக் கூறச் சிவன்மகனும் பண்டிதரும்
முந்தைபுகல் வார்எமக்கு முன்.

### *முருகன் அருளால் நூல்*

5. முருகன்தன் அருளி னாலே
முருகுசொல் பன்ன லுற்றேன்
முருகிசைக் கின்ற வெண்மை
முருகுமா மலரோன் பாதம்
மரபுளோர் அறியப் போற்றும்
அறவுறப் புகன்ற வாறு
அரவுதான் நடக்கக் கண்டு
அரவுதான் நடந்த தொக்கும்.

### *அவளூர் இறைவன், புலவர்*

6. வெறுக்கையொடு அவளூர் தன்னில்
மேவுகா ரணனை வேண்டி
விறல்கிளர் காவி யஞ்சீர்
விளம்பவே நறுமை காட்டி
புரைகவி வாணர் தாளைப்
போற்றியென் சிரத்தில் வைத்து
நெறிக்குணப் பரிவு நீதி
துலங்கவே நிகழ்த்துங் காலே.

## *பெரியோர் நூலைப் புகழ்வர்*

7. மருவுகா ளத்தி ஈசர்
மலரடி இறைஞ்சிப் போற்றி
குருஉமா பதிதாள் போற்றும்
மன்னவர் மன்ன ரான
குருகுலர் கதையைப் பாட
குவலயம் தன்னில் கற்ற
அறிவுள பெரியோர் யாரும்
அவையினில் புகழு வாரே.

## *அவையடக்கம்*

8. கரவில் குடிலன் புன்சொலும் இயலும்
கல்வி எனும்சொல் சொல்லறியேன்
உறவிற் கலைவல் லோர்சபை நடுவே
ஒன்றி யான்தமிழ் உரைத்ததுதான்
வரவில் பிணிநாண்மால் பகழி கொண்டு
மாற்றோர் புறம்செற்ற வரைவில்லிமுன்
இரவில் துணைக்கை வில்லாளியைக் கொண்டு
எய்வேன் எனவில்லை எடுத்ததொக்கும்.

9. முற்றும் தமிழ்தேர்ந்த அகத்தி யர்தான்
முன்ஆக மம்தனை முனிவர்முன்னே
சொற்ற பாவிலும் பழுதுண் டென்றே
சொன்னதனை வானோர் தொகுத்துச்சொல்வார்
சற்றும் அறிவில்லா அசடன் யான்
தக்கை எனமன்றில் சாற்றியதை
பெற்ற தந்தை மகன்செய் குற்றம்
பேணார் புறம்பேசார் பெரியோரே.

10. அரிதார முஞ்செவி அரிவெலியில்
அதிக உழுவர்போல் புறவிதித்தோன்
அரிதன் நிறம்போல் வரிபெரிய
குமரி யாகிய மென்தாதைக்கு
விரிவு விருத்தியின் துணைவனையும்
வினவிப் பெற்றவள் குலத்திலுற்றேன்
கரிபோற் சிற்சில காலமுய்த
கனிவுய்ய மன்னன் தனைதவிர்த்தோன்.

## *குமரர் பதம் போற்றி*

11. வள்ளல் முத்தணி ராசன்கொங்கு
வய்யகம் தன்னில் மாற்றலரை
தெள்ளி மையுடன் வென்றரசு
செய்த காவியம் தனைப்புகல
வள்ளி தெய்வானை மணவாளன்
வாழும் சுடர்நாகக் குன்றதனில்
புள்ளி மயிலேறும் குமரர்பதம்
போற்றிக் கிருபை யிற்புகல்வாம்.

பாயிரம் முற்றிற்று

# குருகுல காவியம்

## நூல்

### *சேரன் சிவனடி சேர விரும்புதல்*

12. வில்லவ னும்புலி ஆழியோனும்
வன்மைமீ னவனும் நன்றாய்
எல்லைகள் பிரித்துத் தேசம்
இயல்புடன் ஆளும் நாளில்
செல்லலில் பொருனை யாற்றோன்
சிவனடி சேர்வ தாக
தொல்லையைக் களைய வேண்டி
துஞ்சிலன் வினையங் கொண்டான்.

### *அரசு வேண்டேன் , அரன் அடி சேர்வேன்*

13. கண்ணுதல் புனிதப் பாதம்
கமலமென் கருத்தில் கொண்டே
பண்ணிய பாவம் யாவும்
பஞ்செனப் பறந்தால் இந்த
மண்ணுலக அரசும் செல்வம்
வாழ்வும்இங்கு எனக்கு வேண்டேன்
நன்னுதல் கண்ணன் தன்முன்
நம்மையார் விடுப்பார் என்றான்.

### *மாணிக்க வாசகரை எண்ணல்*

14. துங்க மிக்கதோர் வாதவூர் இறைவனைத் தொழுது
கங்குல் வாழ்க்கையைக் களைந்தருள் தங்கிய கடவுள்
மங்குல் வானவர் மனமகிழ் மாணிக்க வாசர்
பங்க யப்பதம் காண்கென மனத்திடைப் பதித்தான்.

## அவரால் அரிதாகும் எனல்

15. ஞான நாயகன் கயிலையில் தம்உரு வோடும்
வானவர்க்கு இறைமுன் விடுத்திட வல்லன் ஆகில்
பானு வின்சுடர் உருத்திட நிற்பனோ பாவம்
ஆனதால் அவனால் அரிதா கும்என அமைத்தான்.

## திருவாரூர் சுந்தரரை வணங்க நினைத்தல்

16. திருவு லாவிய தற்பரர் பதத்தினில் சேரல்
பருவ மாய்அருள் கொடுப்பவர் யாரெனப் பார்த்து
அறிவு ளோர்முனி வானவர் புகழ்திரு வாரூர்
மறைய வன்பதம் பணிந்திட நினைந்தனன் மன்னன்.

17. என்னும் மன்னவன் சுந்தரர் மலரடி இணையை
நன்ன யத்துடன் பணிந்திடில் நமையவர் மகிழ்வாய்
பொன்ன கர்செல விடுப்பதற் காம்எனப் புகழ்ந்து
அன்ன தன்மையே செய்வது யாம்என அமைத்தான்.

## சேரன் ஆட்சி
## அகவல்

18. திருவருள் பெருகிச் சிறந்துமே வளரும்
கருணைசேர் கொங்கு ஆர்நாலு நாட்டில்

ராச லெட்சுமியும் நலமுடன் வாழ்க
பூசுரர் வேதம் புவியினில் விளங்க

ஆறிலோர் கடமை அன்புடன் வாங்கி
தாரணி தன்னில் தரும நீதியாய்

செங்கோல் செலுத்தும் சேர ராசேந்திரன்
மங்கள மாக வாழ்ந்திடும் நாளில்

வில்லவ னான வேந்தனும் மனதில்
புல்லறி வதனைப் போக்கிட நினைந்து

## சுந்தரர் இறையடி சேர்ப்பார் எனல்

பேரின்ப ஞானம் புந்தியில் எண்ணி
ஆரூர் தன்னில் அரனடி பணியும்

சுந்தரர் பாதம் தொழுதுகை குவித்து
அந்தியும் பகலும் அர்ச்சனை செய்தால்

திருவருள் புரிந்துநம் செய்பவம் அகற்ற
அருளது கொடுத்து அரும்மறை யோனும்

பொன்கயி லாசம் புகழ்பெற வாழும்
சங்கரன் மலர்த்தாள் தன்னிடம் சேர்ப்பார்

## சேரன் திருவாரூர் செல்லல்

என்றுமன் னவனும் எண்ணியே மகிழ்வாய்
சென்றிட எண்ணிச் சேனையோ டெழுந்து

மனைவியும் கூடி மந்திரி சூழ
அனைவரும் மகிழ அரசனும் தேர்மேல்

இல்லவ ளுடனே எழுந்துமற் றவரும்
செல்லும் வாகனத்தில் திருவா ரூரில்

பாளையம் இறங்கிப் படைகளை அமர்த்தி
சூழும்வெய் யவன்போல் சுடர்மணி வழக்காய்

ஆரூர் வாழும் அரனடி பணிந்து
சீர்மிகுந் தரசு செலுத்திய நிருபன்

சுந்தரர் பாதம் தொழுதிட என்று
சந்தோச மாகத் தலைவியா ளுடனே

## சேரன் சுந்தரரைக் கண்டு பணிதல்

வீதியில் சென்று வேதியர் இருக்கும்
சேதியை அறிந்து சேரமன் னவனும்

பரவையார் வீட்டின் பக்கமே வருக
அரசனும் வாரது அறிந்து வேதியனும்

ஐம்பொன் மாளிகை அபரஞ்சி மேடையில்
செம்பொன் கம்பளி சிறப்பாக விரித்து

மதன உல்லாச மங்கைய ருடனே
சதுரங்கம் ஆடித் தயவுடன் இருந்தார்

கண்டுமன் னவனும் கருத்தினில் மகிழ்ந்து
அண்டையில் வந்து அடியிணை தன்னில்

தாமரைக் கையினால் தாளினைப் பிடித்து
காமரு கண்ணில் கலங்கிநீர் வழிய

அடியவர்க்கு எளிய அருமறைப் பொருளே
கடிமலர்ப் பாதம் கண்டபோ தெனக்கு

பண்டுநான் செய்த பாவங்கள் எல்லாம்
விண்டதென்று உரைத்து வேந்தனும் பணிந்தான்

### *சுந்தரர் ஆசி கூறல்*

அந்தணர் தாமும் ஆசிகள் கூறி
சிந்தனை துலைந்து சிவபதம் பெறுவாய்

செம்பொன் பீடத்து இருமென உரைத்து
பைம்பொற் பாதம் பணிந்தவன் இருந்தான்

### *சுந்தரர் வந்த காரியம் வினவல்*

அந்தணர் தானும் அரசனைப் பார்த்து
சொந்தமாம் புவியில் சுகமுடன் இருந்து

கொங்கு நாலாறு கொண்டிடும் நாட்டில்
பொங்கிய அரசு புரிந்திடும் நிருபன்

எந்தனைத் தேடி இந்நகர் தன்னில்
வந்ததே தென்று மறையவன் கேட்க

### சேரன் சிவனடி சேர்வன் எனல்

சிந்தை மகிழ்ந்து சேர பூபாலன்
சுந்தர மூர்த்தியைத் தொழுதுகை குவித்து

வேதனார் விதித்து விட்டநாள் முதலாய்
காதல்சேர் அரசுக்கு அதிபதி யாகி

தரணியோர் மகிழத் தரும நீதியாய்
அரசுநான் செலுத்தி அவனியில் இருந்தேன்

கதிமைசேர் புவியில் கலிமிகுந் ததனால்
அதிபதி யாகி அரசது செலுத்தி

இருந்திட லாகாது என்றுநான் எண்ணி
அரன்பதி சேர அகந்தனில் நினைந்து

உந்தன் பாதத்தை உறுதியாய் எண்ணி
வந்துநான் பணிந்தேன் மலரடி தன்னில்

### அரசன் கொங்கு நாட்டைச் சுந்தரர்க்கு அளித்தல்

மறையவன் சுந்தரர் மலரடி தொழுது
இறைவனே உனக்கு என்னுடை நாடு

கொங்கு நாலாறு குவலயம் முழுதும்
இங்குளோர் அறிய ஈந்தனென்று உரைத்து

வெத்திலை பாக்கு வேந்தனும் எடுத்து
சித்தமும் மகிழ்ந்து தேவியை அழைத்து

அந்தணர் தமக்கு அவனியும் வாழ்வும்
சந்தோஷ மாகத் தாரைவார் என்றான்

மங்கையும் மகிழ்ந்து மன்னன்முன் வந்து
அங்கையால் மாது அள்ளிநீர் வார்த்தாள்

வில்லவன் வாங்கி வேதியர்க்கு ஈந்து
நல்லருள் கொடுத்து நாதனே என்னை

## அரச தம்பதியர் கயிலை செல்லல்

திரேகமுங் கூடத் தேவியா ளுடனே
அரன்பதி தன்னில் அனுப்புமென்று உரைத்தான்

வேதியர் மகிழ்ந்து விமலரைத் துதிக்க
ஆதியாம் விமலர் அடியரை அழைத்து

புஷ்ப விமானம் புவியினில் கொடுபோய்
சொற்பொருட் குதவும் சுந்தர மூர்த்தியை

ஆரூர் தன்னில் அரனடி தொழுது
சேரனும் மனைவியும் சிறப்புடன் வருவார்

இரதம்மேல் ஏற்றி நன்னகர் கயிலைப்
பதியினில் விடுவீர் பக்தரே என்றார்

சிவகண நாதர் சீக்கிர மாக
புவியினில் வந்தார் புஷ்ப விமானமும்

கண்டு வில்லவனும் கருத்தினில் மகிழ்ந்து
தொண்டனார் பாதம் தொழுதுகை குவித்து

கயிலையில் ஈசன் கழலிணை பணிய
தயவுடன் அனுப்பும் சுவாமிநீர் என்றான்

அரவிந்தப் பாதம் அரிவையும் மன்னனும்
இருவரும் பணிந்தனர் இயல்மறை யவனும்

மனமது மகிழ்ந்து மன்னனைத் தழுவி
கனகபொன் மலையில் கடவுளர் பாதம்

மலரடி பணிய மனையா ளுடனே
நிலவர மாக நீநட என்றான்

## சேரன் கயிலை சென்ற நாள்

மாநிலம் தன்னில் வளரும் கலியுகம்
ஆன இரண்டா யிரத்துமுன் னூறில்

திருவருள் விளம்பி தெட்சணா யணமும்
மருவலர் கன்னி மாதம் ஓணத்தில்

புந்தியின் வாரம் புகழ்மிகும் தசமியில்
சந்திரன் போலே தனுர்லக் கினத்தில்

வஞ்சிநாட் டிறைவன் மனைவியா ளுடனே
தஞ்சமென்று அரனைத் தன்னுளம் நினைந்து

ஏறினர் தேர்மேல் இருபுறம் கணங்கள்
காருபார் செய்யக் கடினமாய் நடந்து

### *கயிலை அடைதல்*

பொன்மலை தன்னில் புகுந்தவர் வரவே
நன்மனத் துடனே நாவலர் பாட

தெய்வ துந்துமி திடுதிடு எனவே
கைத்தாள ஓசை கலீர்கலீர் எனவே

தித்தி மத்தளம் திமிதிமி எனவே
சத்யமன் னவர்கள் சந்தோஷம் மீற

வானவர் முனிவர் மலர்மழை தூவ
கான விஞ்சையர் கவிமலர் பொழிய

அரிவையர் எல்லாம் ஆலாத்தி ஏந்த
இறையவன் வாழும் எழில்சேர் மண்டபம்

வீதியில் வந்து வேந்தனும் மனைவியும்
நாதனைக் காண ரதம்விட் டிறங்கி

செம்பொன் மாளிகைக்குள் சிறப்புடன் நடந்து
ஐம்பொன் மேடையில் அதிர்ந்துகட் டியங்கள்

நந்தீஈஸ் பரனை நலமுடன் பணிந்து
அந்திவண் ணன்பால் அரசனும் வரவே

## கயிலைக்காட்சி

நவமணி யிழைத்த ரத்தினமண் டபத்தில்
பவமுழுது அகற்றும் பராபவ மூர்த்தி

மவுன பூர்ணமாய் மாதுமை பாகன்
சிவம்எனும் நாதர் சிம்மா சனத்தில்

செஞ்சுடர் ஒளியாய் தேவியா ளுடனே
நஞ்சினை உண்ட நாதனும் இருக்க

## சேரன் சிவனை வணங்கல்

வஞ்சிநாட் டிறைவன் மனைவியா ளுடனே
கஞ்சமா மலர்த்தாள் கண்ணில் புனைய

விழுந்துமே பணிந்து வேந்தன் இல்லாளும்
எழுந்திருந் திருவோரும் இருகை குவித்து

அரகரா சிவனே அருமறைப் பொருளே
கருணையங் கடலே கதிரொளி விடிவே

அத்தியை உரித்து ஆடையாய்த் தரித்து
வெத்திசேர் மதனை விழியினால் எரித்த

சங்கரா சிவனே சதாசிவப் பொருளே
கெங்கையை அணிந்த கெவுரிபங் காளா

நாதனே விண்ணோர் நலமுடன் பணியும்
பாதனே அடியார் பங்கினில் வாழும்

நீதனே கயிலாய நிமலனே நானுன்
பாதமே இருக்கப் பட்சம்வைத் தருள்வாய்

என்றுவில் லவனும் இறையடி பணிய
நன்று நன்றென்று நந்திவா கனத்தோன்

### *கயிலை அடியாருடன் சேரன் தம்பதியர்*

திருவுளம் மகிழ்ந்து சிவனடி யாரொடும்
இருமென உரைத்து ஈந்தனர் விபூதி

வேந்தனும் வாங்கி மெய்யினில் அணிந்து
சார்ந்தவன் கயிலை தன்னில்வாழ்ந் திருந்தான்.

### *சுந்தரர் கொங்கு நாட்டை அந்தணர்க்கு அளிக்க எண்ணல்*

19. சார்ந்தவண் இருக்கும் மன்னன்
தக்கதோர் நகரு நாடு
வேந்தனாய் இருந்து மண்மேல்
விறல்படைத் திடுவ ரென்று
ஆய்ந்தனன் மனத்தில் தத்தம்
அந்தணர் குலத்தில் உள்ளோர்க்கு
ஈந்திடல் நல்ல தென்று
எண்ணினன் புகழ்மி குத்தோன்.

20. இன்னவார் மனத்தில் எண்ணி
இணையடி பணியும் *சீசர்*
தன்னையும் அழைத்து நீங்கள்
தரணியில் மறையோ ரான
என்னுட குலத்துள் ளோரை
இங்ஙனம் அழையீர் என்ற
சொன்னசொல் கேட்டு நாதர்
சுருக்கினில் அழைத்து வந்தார்.

### *அந்தணர் பெற்ற கொங்கு*

21. வேதியர் வந்து ஆரூரில்
விமலன் பாதத்தைப் பூசைசெய்யும்
நாதர் சுந்தரர் பதம்பணிந்து
நம்மை அழைத்தது ஏதெனக்கேட்க

காத லோடும் கயிலணைத்து
கருத்தில் மகிழ்ந்து இவரைப்பார்த்து
நீதியாய்க் கொங்கு தேசமுற்றும்
நீங்கள் அரசு செலுத்துமென்றார்.

### *காசிபகோத்திர பிரமாதிராயர் அரசர், கௌசிகர் அமைச்சர்*

22. சப்த கோத்திரம் தன்னிலுள்ள
தகைமை யுள்ள காசிபன்மரபில்
வெத்தி மிகுபுகழ் பிரமாதிராயர்
வேந்த ராக இருமெனவே
அத்தி நிகரான கௌசிகனை
அமைச்சராய் இருமென உரைத்து
சித்தம் மகிழ்ந்திரு வோர்களையும்
செங்கோல் நீதி செலுத்துமென்றார்.

### *கவுணிகன் நாட்டிமை அதிகாரி*

23. கவுணிகன் என்னும் மறையவனை
கருத்தில் மகிழ்ந்திவர் சொற்படிக்கு
புவனம் இருபத்து நால்நாட்டில்
பொருந்த நாட்டிமை புரியுமென்று
தவம்மி குந்திடும் சேரனைப்போல்
தர்ம நீதிக ளாயிருந்து
அவனி தனையாண்டு மூவருக்கும்
அருள்கொ டுத்தனன் மாமறையோன்.

### *ஆத்திரேய குலத்தார் - பூசை, சோதிடம்*

24. ஆத்திரேயன் என்னும் மறையோனை
அந்தணர் இவரென்று அனைவருக்கும்
நேர்த்தி யான குலம்விளங்க
நிமலன் பூசை தவறாமல்

சாத்தி ரங்கள் வகுத்துரைத்து
தரணி மன்னர்க்கு வரும்குறிகள்
பார்த்துச் சொல்லுமென் றேயுரைத்தார்
பரமன் பதம்பணிந் திடும்மறையோன்.

### *பிற மூன்று கோத்திரத்தார் பொருள் பெறல்*

25. மற்ற மூவர்கள் தங்களுக்கு
மாநிலத் தரசு உள்ளமட்டும்
நித்தியம் வேண்டும் பொருள்கொடுத்து
நீணிலத் தரசு ஆளுமென்று
அத்தனார் பதம்பணி மறையோர்க்கு
அன்பு மிகுந்து அருள்கொடுத்தார்
சித்தம் மகிழ்ந்தவர் தேசமதில்
சேர்ந்து செங்கோல் செலுத்திநின்றார்.

### *வைசியரை உடன் சேர்த்தல், கள்ளர் வரல்*

26. சீர் மிகுந்த மறையவர்கள்
செல்வம் மிகுந்த வைசியர்களை
சேரு மென்று அவரைச்சேர்த்து
தேச மதிலே தன்மநீதியாய்
ஆறி லொன்று கடமைகொண்டு
அவனி தனையாண் டிருக்கையிலே
காரு பாருகள் நில்லாமல்
கள்ளர் வந்து சுழலலுற்றார்.

### *கள்ளர் கொள்ளை, களவு*

27. கள்ளர்கள் மறவ ரான
கயவர்கள் கூட்டம் கூடி
மெல்லவே கொங்கு நாட்டை
மெலிந்திடச் செய்ய வென்று
கொள்ளையும் களவு சூறை
கொண்டிடச் செங்கோல் வேந்தர்

உள்ள வாழ்வு இழந்தோமென்று
உருகினார் வினயங் கொண்டார்.

### *கள்ளர் செயலால் துயர்*

### *கொச்சகம்*

28. தெள்ளிமைசேர் கொங்குநகர் செல்வமுழு தும்பறிக்க
கள்ளர்வந்து கொள்ளையிடும் கலகம் தெளிவதற்கு
வள்ளலெனும் வேந்தர் மாமறையோர் யோசனையால்
எள்ளளவும் தோணாமல் ஏங்கி மனம்உழன்றார்.

### *வெண்பா*

29. மன்னன் மதிமயங்கி மந்திரிதன் யோசனையால்
முன்னம் செனித்த முதல்வனார் - தன்னுடனே
கள்ளர்களை வெல்லக் கருத்தறியோம் என்றுரைத்தார்
விள்ளுவார் பூசுரனு மே.

### *ஆரூர் சென்று சுந்தரரை வேண்டல்*

30. என்ற அரசருடன் ஏகினார் மந்திரியும்
நன்றிதுவே என்றுகொங்கு நாட்டாரும் - சென்றுமே
ஆரூரில் சுந்தரர்தன் அடிக்கமல மேதொழுது
காருமென வேயுரைத்தார் காண்.

### *சுந்தரர் வினவல் அந்தணர் பதில்*

31. அடிபணிந்த மன்னவரை அஞ்சலென வேயமர்த்தி
கொடுமையென்ன கொங்குநகர்க் கோவே - கடிந்ததில்
கள்ளர்பல துன்பம் கலக்கம் தெளிவதற்கு
விள்ளுமென வேயுரைத்தார் மன்.

### *சுந்தரர் இறையருளால் கள்ளரை வெல்வீர் எனல்*

32. தொழுதுமுன் இறைஞ்சி நிற்க
சுந்தரர் மனம்ம கிழ்ந்து

வழுவில்லா மன்னர் உந்தன்
　　மனத்துயர் விளம்பச் சொன்னேன்
எழுதடங் காத வேணி
　　இறைவன்தன் அருளால் நீரும்
பழுதுசெய் பவரை வெல்லப்
　　பயனுரை கேளும் என்றான்.

***முன்பு மூவேந்தர் ஆட்சியில் ஒட்டியன், சல்லியன் செய்த துன்பம்***

33. முந்து நாளினில் சேரனும் மீனவன் முரல்சேர்
சிந்து லாவிய சோழனும் தேசமாள் நாளில்
வந்து சல்லியத் தலைவரும் மாநிலம் அழிக்க
அந்த மூவர்கள் செய்வகை கேளென அறைவார்.

***சேரன், சோழன் பாண்டியனிடம் செல்லல்***

34. விறல்குட கனும்சீர் நேரி
　　வெற்பனும் கூடற் கெய்தி
நிறப்பனைப் பஞ்ச வன்தன்
　　கோட்டையிற் சென்று நீதி
உரைத்திட மன்னர் கூடி
　　ஒட்டியன் சல்லி யன்தன்
நிறைஇடர் செய்வார் யாரென்று
　　உரைத்திடச் சேரன் சொல்வான்

***பாண்டியன் உரை***

35. இருவர்கள் தேசம் தன்னில்
　　வியவர்கள் உண்டோ என்ன
இருவரும் இல்லை என்ன
　　கொண்கனும் இயம்ப லுற்றான்
பொருவில்பொன் புகலி நீத்தம்
　　பூவுறப் பெருகி ஓடி
திருவுயர் கழனி சூழ்ந்து
　　சிறந்தபொத் தப்பி நாட்டில்

### பொத்தப்பி மன்னன் துயர்தீர்ப்பான் எனல்

36. மாசையன் குலத்தில் உற்ற
மன்னர்கள் பொருதி வைகும்
வாசநற் புறுமின் நாட்டில்
பிரமவே வலர்க்கு நீர்மை
மாசுசல் லியனை யும்தோள்
மகிமையொட் டியனையும் கொன்றே
ஏசுறத் துடங்க வேஅவ்
இறைவர்போல் காணேம் என்றார்.

### மூத்தோர்களை அனுப்புக எனல்

37. உரைத்தவாறு உணர்ந்து மன்னர்
இருவரும் உவகை எய்தி
சரித்திரத் தென்தே யத்தின்
தானுணர் வரும்சீர் செய்ய
திருத்தமாய் உரைத்தி யென்ன
செப்புவான் தடத்தின் தாமன்
இரைத்தமுன் னோர்கள் தம்மை
அனுப்புதிர் என்றான் ஐயன்.

### மூத்தோர் பொத்தப்பி மன்னன் காளத்தி கண்ணப்பராசனிடம் செல்லல்

38. புனிதபொன் திறையும் கட்டி
ஏகெனப் புகன்றான் மற்றை
இனியசொல் முதுவர் ஏகி
காளத்தி நாட்டில் என்றும்
குணமுற நிருபர் போற்றக்
கனகபீ டிகையின் மீது
முனையுற உறைவ சந்த
கண்ணப்ப ராசன் முன்போய்

## *கண்ணப்ப ராசனை வேண்டல்*

39. நெறியுடன் வணங்கிப் போற்றி
நிற்குணர் தமையுய்க் கென்ன
உறைந்தபின் திறையே தென்னும்
கேட்கவே செப்ப லுற்றான்
விறல்மிகு தெக்க ணத்தில்
சல்லியன் வினையால் மூவர்
திறமுறக் கூடி எம்மை
உமதுபால் செலவி டுத்தார்

40. விடுத்த தேதென அமைச்சர்
விளம்பிநின்று ஒட்டியர் தங்கள்
அடற்றொகை துலைக்கும் செய்கைக்
காகவே யுகங்கள் கூறவும்
திடப்பட அவசஞ் சென்று
ஆரியர் தருவார் என்றே
தடப்பொறை எனப்பு கன்றார்
தலைவனும் புகல்வான் ஆங்கே

## *கண்ணப்பராசன் வர மறுக்க மூத்தோர் நாடு திரும்புதல்*

41. நங்குலத் தவரும் யாமும்
நண்ணுவது இல்லை என்றே
துங்கதக் கணத்தில் நேய
தோமற விடையும் கொண்டு
இங்கிதம் தளர்ந்து முன்னோர்
ஏகிவந் தொருமூ வேந்தர்
தங்களைக் கண்டு போற்றி
சரித்திரம் கழல லுற்றார்.

## *மூவேந்தரே செல்லல்*

42. சீவன் குலந்தனில் தானுதித்து
சிறந்த வளவர் ராசாக்கள்

பூவர் சுடர்மணி முடிமிலைச்சும்
பொருநர் வருவதும் இல்லைஎன்றே
ஓவி லாமொழி விளம்பியபின்
செம்பி யனும்குட கோனுடனே
தேவர் போல்சென்று காளத்தியின்
திரியம் பகனைக் கண்டிறைஞ்சி

***கண்ணப்பர் மூவேந்தரை வரவேற்று வந்த காரியம் வினவல்***

43. கவவில் லவனுடன் மணிமண்டபக்
காவு குறையா மற்றெய்தினார்
மவுலி புனைந்த கவின்குருளை
வசந்த கண்ணப்ப காவலனும்
நவமங் கவரைக் கண்டெழுந்து
தழுவிக் கொண்டு நீவிரிவன்
நவில வந்த குறைதவிர்க்கும்
என்னப் புகல்வான் குரியனுமே.

***ஒட்டியன் சல்லியனை வெல்லவெனக் கண்ணப்பராசன் உதவ முன்வரல்***

44. ஒட்டியனையும் சல்லியனையும் காய்ந்து
உடற்றவே உம்மருகில் வந்தோம்
வெட்டி அவர்தமை அகற்றிவைக்க
வேந்தே உம்மிடம் வந்தோமென்றார்
விட்ட குறையால்சொல் மொழியுணர்ந்து
நன்றென்றே குருகுலம் விளங்கவே
இட்டமுற இவர்க்கு ஈவதினும்
இனிய தமிழ்மாலை தானுரைத்தார்.

***கண்ணப்பர் புறப்பட ஆயத்தம்***

45. எய்தி யவர்கிளை யடுத்துவிறல்
இயற்று வோம்என நேரியனும்
மய்த கர்த்தசெங் கலையலுங்கல்
பயிற்றி மாறாத் துவசனுக்கு

செய்ய பொலிவுற நிகழ்த்தியபின்
சித்தம் களித்துத்தன் பேரணியை
மய்ய னொளிபோல் ஆர்த்திடவே
ஜொலித்தார் பேரணி அடித்தாரே.

### குரு உமாபதியிடம் கூறி ஆசி பெறல்

46. வருகிறோம் என்று குருகுலத்தின்
மன்னர் எழுந்து உமாபதியாம்
குருவின் பாதம் அவர்பணிந்து
கொங்கு முதல்மன்னர் மூவருக்கும்
செருநர் தமைவென்று யாமளித்து
சென்று வந்திவண் சேர்ந்திடவே
அருள்கொ டுத்து அனுப்புமென்றார்
அய்யர் நீறு கொடுத்தனரால்.

### கண்ணப்பராசன் புறப்படல்

47. வாங்கி மெய்யினி லேதரித்து
மன்னர் குருகுலர் பயணமதாய்
தாங்கு சிவிகையின் மீதேறி
தவண்டை சின்னங்கள் ஊதிவர
மாங்குயில் தரணி மீதினிலே
மன்னர் சிங்கம் வாரார்என
ஓங்கும் எக்காளம் ஊதிவர
ஒலித்தார் கொடிவகை பிடித்தாரே

### படையில் கொடிகள்

48. நந்தித் துவசமும் சிலைத்துவசம்
நாக துவசமும் பனைத்துவசம்
வெந்திறல் சிங்கத் துவசமுடன்
கச்சைத் துவசமும் புலித்துவசம்
முந்த உயர்மா ருதித்துவசம்
முதிய கலுழப்பொற் றுவசமுடன்

முந்தைக் குருகுலர் யாவர்களும்
முடுகி எழுந்தனர் விரிகடல்போல்.

### *புறப்பட்ட காலம்*

49. வளரும் கலியுகத் தளவாணை
வரம்பு சொலும்இரண்டா யிரத்திரனூர்
செழுமை நாற்பத் தொன்பதின்மேல்
செல்லும் கீலக வருஷம்தனில்
ஒளிர்துலாத் திங்கள் தேதிஐந்தில்
உயர்கிருஷ்ண பட்சம் மதிகோடணம்
வளர்பஞ் சமிமான் தலைநாளில்
நளிகு பாலவஞ்ச தனுவிற்சென்றார்.

### *வேங்கடம், சயிலம், திருச்செங்கோடு, காவிரி வரல்*

50. வளவன் முதல்பல படையெழுந்து
வந்தார் வேங்கட கிரியும்கண்டார்
தளவின் உருவங்கொண் டிடும்சயிலம்
தன்னை நோக்கினர் தொழுதொருவி
முளரி மலர்க்கோதை நகர்குறுகி
முதல்வன் உறையும்செல் வரைத்துதித்து
வளரும் தமிழ்முனி கொணர்ந்தநதி
நடந்து புனல்படிந் தனர்மகிழ்ந்தார்.

### *கருவூரில் பசுபதி வணக்கம்*

51. உள்ளம் அயராமல் அமரர்கள்போல்
ஒகை பொருந்தரு கினில்வந்து
கள்ளு லாய்த்தண் மலர்ப்பொழில்சூழ்
மேன்மை கருவூ ரினில்வந்து
வெள்ளை ஏறுடைப் பசுபதிதாள்
விரும்பித் தொழுத னர்தினம்
கிள்ளல் அகற்றும் பஞ்சவனும்
வந்து மனமகிழ்ந் திருந்தனனே.

## *போர் தொடங்கியது*

52. வாகை மலர்ப்புயக் குருகுலக்கோன்
மடங்கல் ஆசனத் திருவின்வைகி
ஓகை வழுதியன் தாள்புகலும்
ஒட்டிய னும்சல்லி யனும்வரவே
தோகை நிறுவின்வெண் றிருக்கனலும்
தூது தூண்டினன் செறுநர்வயின்
ஆகை யால்முனிந் தெழுந்துவந்து
அசுரர் தேவர்மீ தெழுந்ததுபோல்

## *குருகுலர் வெற்றி*

53. குருகுல மன்னரும் குவல யந்தனில்
மறுவல் சல்லி யன்புல் லர்களும்
இருவரும் பொருதிய வெம்போர் தன்னில்
திருவு லாவிய குருகுலர் செயித்தனர்.

## *பகைவர் மரணம், கருவூரில் படை*

54. சல்லியத் தலைவர் யாரும்
சமரினில் இறந்தார் இப்பால்
வல்லமை கொண்ட வீரர்
அரும்பெரும் குருகு லத்தார்
எல்லையில் லாத கீர்த்தி
பெற்றஅக் கருவூர் தன்னில்
ஒல்லென வந்தார் மிக்க
உவகையால் உளம்ம கிழ்ந்தார்.

## *மூவேந்தரையும் ஆட்சியில் அமர்த்தி குருகுலர் தன்னகர் திரும்பல்*

55. உவகையால் உளம்ம கிழ்ந்து
உயர்குரு குலத்துள் ளார்கள்
பவம்முழு தகற்றும் ஈசன்
பசுபதி பாதம் போற்றி

தவம்மிகும் மூவர் உங்கள்
தரணியை ஆளும் என்று
கவனமாய் நகருக் கேக
கருத்தினில் நினைந்தார் மன்னர்.

### *மூவேந்தர் நன்றி*

56. குருகுல மன்னர் ஆனோர்
கொங்குமூ வேந்த ருக்கு
மருவலர் தம்மை வென்று
மகிழ்ச்சியோ டிருத்தி என்ன
அரசரும் மனம்ம கிழ்ந்து
அருந்தமிழ் மாலை சூட்டி
நிருபரே உம்மால் நாங்கள்
நீணிலம் பெற்றோம் என்று

57. வெற்றிகொள் குருகு லத்து
வேந்தர்கள் உவகை கொள்ள
ரத்தின ராசி யாலே
நன்மலர் மாலை சூடி
சுற்றுதேர்ப் புரவி யானை
சூழ்ந்திட அநேக மாந்தர்
கொற்றமே மிகுந்த வேந்தர்
கொண்டுநல் முகூர்த்தம் தன்னில்

### *குருகுலக் கண்ணப்பர் காளத்தி திரும்புதல் திருச்செங்கோடு, சிதம்பரம், வேங்கடம் வணங்கல்*

58. பேரிகை முழங்க வீரம்
பெற்றிடும் குருகு லத்து
வீரர்கள் வாரார் என்று
மேவிய சின்னம் ஊதத்
தாரணி புகழும் வேந்தர்
சற்பவெற் பதனில் வந்து

மேருபோல் நின்ற ஈசன்
மெய்ப்பதம் போற்றி செய்தார்.

59. காலையில் கடந்து மன்னர்
கதித்திடும் சிதம்ப ரத்தில்
ஆலமே உண்ட ஈசன்
அரனடி பணிந்து அப்பால்
வேலைசூழ் உலகம் மெச்சும்
வேங்கட மலையில் தங்கி
சீலமோ டெழுந்து வேந்தர்
காளத்தி நகரில் வந்தார்.

## குலகுரு வணக்கம்

60. வந்தவர் குருகு லத்தார்
மனத்தினில் உவகை எய்தி
சிந்தனை அகற்றும் ஈசன்
திருவடி பணிந்து வேதம்
புந்தியில் பரந்த ஞானி
புகழ்உமா பதிதாள் போற்றி
எந்தையே காரும் என்று
இருந்தரசு இயற்றி னாரே.

## *இப்பண்டைய செய்தி அறிந்த மறையவர் காளத்தி அரசரால் கள்ளர் தொல்லை நீங்கும் எனல்*

61. இன்னதன் மையினால் மூவர்
இருந்தரசு ஆளும் நீங்கள்
விண்ணவர் புகழ்கா ளத்தி
வெற்பினுக்கு ஏகி அந்த
மன்னவர் வந்தால் அந்த
மருவலர் செயிப்பார் அல்லால்
இன்னகர்ப் பதியில் உள்ளார்
யாவரால் முடியா தென்றார்.

## கொங்கு அந்தணர் காளத்தி புறப்படல்

62. சுந்தர மறையோர் இவ்வாறு
சொல்லலும் வேந்த ரான
அந்தணர் கேட்டுத் தன்னொரு
அமைச்சரும் நல்ல தென்று
கந்தமா மலர்த்தாள் போற்றி
கணநகர் வந்து ராசர்
பைந்தமிழ் வாணர் போற்றப்
பயணபே ரிகைஅ டித்தார்.

63. துந்துமி மேள தாளம்
தோற்கரு விகள்மு ழங்க
சந்ததம் விளங்கு வேதத்
தலைவர்கள் சேசே என்ன
சுந்தரம் மிகுந்த மாதர்
சேனையைப் பாடச் செங்கோல்
அந்தணர் எழுந்தார் பேரி
அடித்தனர் கொடிபி டித்தார்.

64. வேதக் கொடியும் புலிக்கொடியும்
மிக்க புகழ்கரு டக்கொடியும்
நாதனார் ரிஷபக் கொடியும்
நாகக் கொடியும் அன்னக்கொடி
காதல்சேர் முரசுக் கொடியும்
கதித்த சிங்கக் கொடியுடனே
ஈதெல்லாம் பிடித்து ஓங்கிவர
எழுந்தார் நல்வேளை ஈதெனவே

65. ராசன் அம்சனும் நாட்டானும்
நன்மை வகிக்கும் கூட்டமதாய்
ஆசீர் வாதம்செய் தேமறையோர்
அட்சதை இரைத்தே வந்தார்

வாச மிகுகொங்கு நகராளும்
மன்னவர் மன்னர்வா ராரெனவே
ஓசை யுடன்உல கோர்அறிய
ஓங்கு சின்னங்கள் ஊதினராம்.

### *பயணத்தில் கஞ்சமலையில் குருவணக்கம்*

66. பொன்னி நதிமுத்தா நதிவிடுத்து
புகழும் நாமக்கல் ஊர்கடந்து
மன்னவர் கஞ்ச மலைதனிலே
வந்து குருதவ ராசராசர்
பொன்னடிக் கமலம் பணிந்துபதம்
பொருந்தும் மருவலர் தம்மைவெல்ல
தொன்னகர் திருக்கா ளத்தியினில்
தோன்றும் குருகுல மன்னவர்கள்
இன்னகர் தன்னிலே வருகை
ஈயும் அருள்என வேயுரைத்தார்,

### *குருஆசி கூறல்*

67. நன்றெனக் குருதவ ராசர்
நளின பண்டித சுவாமிகளும்
இன்றுநீர் செய்யும் காரியங்கள்
எய்தி வந்திவண் மருவலரை
வென்று திறைகொண்டு நின்னகரில்
மேவி அரசு புரிந்திடுவீர்
சென்று வந்திவண் சேருமென்று
திருவுளம் மகிழ்ந்தே உரைத்தார்.

### *திருவண்ணாமலை, சிதம்பரம் கடந்து காளத்தி அடைதல்*

65. குருவின் பாத மலர்பணிந்து
கொங்கு நகராளும் மன்னவர்கள்
இறைவன் போல்நீர் அருள்கொடுத்தீர்
எங்கள் தவம்நிறை வேறுமென்று

அருணை மாநகர் தான்கடந்து
அன்று தில்லையில் தங்கிநின்று
மருவு லாவிய காளத்தியில்
வந்து இறங்கினார் மறையவர்கள்.

### காளத்தி குருகுல மன்னர் முத்தணிராசனைக் காணச்செல்லல்

69. கதிரவன் உயரத் தெழுந்து
கர்த்தனெனும் குருகுல மரபில்
அதிபதி எனவே உதித்து
அரசு செய்யுமுத் தணிராசன்
நிதியம் பெருகிய அரண்மனையில்
நேர்ந்து அவர்தமைக் காணவென்று
பதியை விட்டந்த மறையவர்கள்
பலரும் புடைசூழ வேயெழுந்தார்.

### காவலரிடம் அறிவித்தல்

70. ராசன் அமைச்சரும் நாட்டாரும்
நல்ல வணிகரும் கூட்டமதாய்
ஆசு சேர்முத் தணிராசன்
ஐம்பொன் மாளிகை மணிமுகப்பில்
நேசமாய் வந்து தான்மகிழ்ந்து
நேர்ந்த காவல ருடனேகொங்கு
தேச மன்னர்வந் தார்எனவே
சேதி சொல்லிவா எனஉரைத்தார்.

### வாயிற்காவலன் அறிவித்தல்

71. தூதர் ஓடியே முத்தணி ராசனைத்
தொழுது காதலால் உமைக்காண
வேத பூசுரர் கொங்கினுக்கு அரசர்
மேலை பின்வா சலிலிருந்து

நாதனே உமது சமூகம் காணவே
நாடி வந்தோம் எனவுரைத்தார்
சேதி இதனை உரைத்திட வென்று
சேர்ந்தேன் எனவே உரைத்திட்டான்.

### *முத்தணிராசன் அந்தண அரசரை வருமாறு கூறல்*

72. என்று தூதர் இசைத்தலும் முத்தணி ராசன்
துன்று பல்லிதழ் துடித்திட முடித்தலை துயுக்கி
அன்றடர் மறையோர் தம்மைத் தடுத்திட லாமோ
சென்று துண்ணென விடுக்குதி நீயெனச் சினந்தான்.

### *வாயில் காவலர் உரை*

73. துற்றன் ஓடியே மணிமுக மேடையில் உற்ற
கொற்ற மிக்கதோர் வேதியர் வேந்தரைக் கூவி
வெற்றி மன்னவர் தம்மிடம் செல்கென விடுப்ப
சுற்று தானையோ டெழுந்தனர் வேதியர் துகையே.

### *முத்தணிராசனிடம் கொங்குமன்னர் செல்லல்*

74. ஐம்பொன் மேடையில் உள்ள மணிவா சலைஅணுகி
செம்பொன் பீடச் சிம்மாசன மீதிருந் தெழில்சேர்
பைம்பொன் னாம்இணை மவுலியை அணிந்துசீர் மன்னன்
இன்பமாய் மறையோர் கள்முன் நடந்தனர் எழிலாய்.

### *முத்தணிராசனை வணங்கல்*

75. மன்னவர் முன்வர மறையவர் மனமகிழ்ந்து இனிதாய்
பொன்னின் தாலத்தில் பூஷண நிதியெலாம் பொருந்தி
முன்னரே அழைத்து அந்தணர் அரசுசெய் தோங்க
அன்ன வன்தனை அடிதொழுது ஏத்தினர் அழகாய்.

### *குருகுலமன்னர் முத்தணிராசன் கேள்வி*

76. விரைவின் மாமறை யோர்களை மேடையுள் அழைத்து
நிருபன் தன்அரி யாசனத்து அவர்களை இருத்தி

இறைவரே உம்தேசம் விட்டு என்னிடம் என்ன
குறையி னால்இவண் வந்தது நீர்மொழி கூறும்.

### *கொங்கு மன்னர் கூறல்*
### *அகவல்*

77. திருவருள் நின்று செழித்துநின் றோங்கும்
கருணைசார்ந் தினிய காளத்தி வெற்பில்

ராசலெட் சுமியும் நன்மைசேர் திதியும்
வாசமாய் விளங்கும் மன்னவர் மன்னா

குருகுலந் தன்னில் கொற்றமே மிகுந்த
மரபினில் உதித்த மன்னரே கேளீர்

கொங்கு தேசத்தின் கொற்றவர் நாங்கள்
மங்கள மாக வாழ்ந்திடும் நாளில்

ஒட்டியர் விராடர் ஊர்வழிக் கள்ளர்
மட்டிலாத் துஷ்டர் வந்துநன் னகரில்

கொள்ளையும் களவும் கோவுகள் சிறையும்
தள்ளியே போறார் சல்லியத் தலைவர்

சீர்பெறு நகரில் செழுநரை வதைக்க
வீரர்கள் யாரும் இல்லையென் றெண்ணி

மனதினில் மெலிந்து மன்னவர் நாங்கள்
அனைவரும் போக ஆரூர் தன்னில்

அந்தி வண்ணன்தன் அடியினைப் பரவும்
சுந்தரர் பாதம் தொழுதுகை குவித்து

கள்ளர் தம்மைக் கருத்துடன் வெல்ல
விள்ளுமென்று உரைக்க வேதியன் மகிழ்ந்து

அந்தநாள் மூவர் ஆண்டிடும் போது
வந்துமே கள்ளர் வையகம் அழிக்க

மன்னவர் மெலிந்து வடதிசை தன்னில்
நண்ணியே சென்று நாவலர் புகழும்

மிக்க காளத்தி வெற்பினிற்கு அரசன்
தக்கதோர் குருகுலம் தன்னில்வந்து உதித்த

கண்ணப்பன் தன்னைக் கருதியே அழைத்து
மன்னவர் தாமும் வந்திவண் இருந்து

செருநரை வீட்டித் தேசம் மூவருக்கும்
அருள்புரி என்று அகன்றவர் போனார்

மன்னவர் நீங்கள் மனமகிழ்ந் திடவே
இன்னகர் தன்னைவிட்டு ஏகியே அவ்விடம்

வேந்தர்கள் தம்மை விரும்பிநீர் அழைத்து
சார்ந்திவண் வந்தால் தரியலர் தம்மை

வென்றுமக்கு அரசு மேன்மையாய்த் தருவார்
என்றெமக்கு உரைத்தார் இயல்மறை யோனும்

நன்றென மகிழ்ந்து நன்னகர் விட்டு
இன்றுநாம் வந்தோம் இன்னகர்ப் பதியில்

ஆனதால் நீரும் அவனியோர் புகழச்
சேனையே டெழுந்து சென்று மாற்றலரை

வென்றெமக்கு அளித்தால் மேன்மையுண்டு உமக்கு
குன்றிலா நிதியும் கொடுத்துநாம் விடுவோம்

என்று வேதியர்கள் இயம்பவே ராசன்

### *முத்தணிராசன் பதில், குல குருவிடம் செல்லல்*

நன்றென நகைத்து நம்மிட செயலால்

இன்னகர் விட்டு ஏகுவது இல்லை
நன்னய மிகுத்த நம்குல குருவின்

வாக்குக் கேட்க வாருமென் றெழுந்து
நோக்கினார் அனைவரும் நுண்ணறிவு உரைப்ப

வம்மிசக் குருவின் மாளிகை வீதியில்
நன்மையாய் அவ்விடம் நடந்திடும் ராசன்

கொங்க ராசனும் கொற்றவர் கூட
மங்கள மாக மலரடி பணிந்தார்

## குலகுரு வணக்கமும் வந்த நோக்கம் கூறலும்

வேத வேதாந்த மெய்ப்பொருள் ஆன
நாதனார் மகிழ்ந்து நல்மனத் தோடும்

கொற்றவர் இந்தக் குவலயம் தன்னில்
எத்திசை போற்ற இருந்தரசு ஆண்டு

முத்தியும் பெறுவீர் முடிவிலென் றுரைத்து
வித்தகர் தாமும் விபூதியும் கொடுத்தார்

வேந்தரும் வாங்கி மெய்யினில் அணிந்து
மாந்தளிர் மேனி மகேசுவரர் ரூப

காளத்தி ஈசர் கமலபொற் பாதம்
வேளைகண் டிறைஞ்சும் வேதியர் கேண்மு

கொங்க தேசத்தில் கொற்றவர் இவர்கள்
நங்குலத் தோறும் நம்மிட சேனை

தன்னொடு கூடத் தம்மிட நகரில்
ஒன்னல ரான ஒட்டியர் கள்ளர்

வாதைகள் பலவும் மாற்றிட என்று
வேதியர் கோனும் விளம்பினன் அதனால்

உந்தன் பாதத்தில் உள்ளது புகன்றோம்
வந்திடும் செயலை வகுத்துரை யென்ன

## குலகுரு உரை

வித்தகர் உமாபதி மெய்குரு தேசிகர்
முத்தணி ராசன் முகமது நோக்கி

எத்திசை யும்புகழ் இந்நகர்ப் பதியில்
சுத்த வீரமதாய்த் துலங்கிடும் அரசு

புரிந்திடும் நிருபர் பூசுரர் தேசம்
வருந்தியே சென்று மாற்றலர் தேசம்

வென்றவண் அளித்தால் வேந்தர்கள் தாமும்
சென்றுநம் தேசம் செய்திடு மட்டும்

### *சந்திரதுண்டம் வேண்டல்*

காணியாய் நமக்குக் காளத்தி ஈசர்
தானுமே அறியச் சந்திர துண்டத்தில்

தாரையாய் நமக்குத் தந்ததே யானால்
நீறணி கடவுள் நிமலகாரர் அருளில்

அரசரே நாமும் அனைவரும் ஏகி
நிருபனார் கொங்கு நீணிலம் அதனில்

செருநரை விடுத்தே தேசம் நாலாறும்
அரசது கொடுக்கல் ஆகுமென்று உரைத்தார்

### *காளத்தி ஈசர் வணக்கம்*

நல்லதென்று உரைத்தே நன்மறை யோரும்
வல்லவன் முத்தணி ராச மன்னவன்

உமாபதி தேசிக ருடனே காளத்தி
ஈசர் ஞானாம்பாள் எழில்குகன் முதலாய்

அன்னவர் தமக்கு அபிஷேகம் செய்து
வன்னமா மலர்த்தாள் மகிழ்ந்தவர் பணிந்து

## *சந்திர துண்டம் காணி தாரை வார்த்தல்*

சந்திர துண்டம் தன்னரு காக
வந்துமே இருந்து மாமறை யோர்கள்

மெய்யது மகிழ்ந்து வெத்திலை பாக்கு
கைதனில் எடுத்துக் கதித்திடும் புகலி

நீரள்ளி விட்டு நிமலனார் அறிய
தாரையாய்க் காணி தந்தோமென்று உரைத்து

குருஉமா பதியாம் கோரக்கர் கையில்
மறையவர் கொடுக்க வாங்கியே அவரும்

ஈசர் பிரசாதம் எழில்சேர் விபூதி
ஆசீர் வதித்து அந்தணர்க்கு ஈந்து

முத்தணி ராசன் முகந்தனை நோக்கி
இத்தலம் தன்னை இனத்தவர்க்கு அளித்து

கொங்கு தேசத்தில் கொற்றமே பெருக
நங்குலத் தவர்கள் நம்மிட சேனை

## *சேனையுடன் குருகுலர் ஐவரும் புறப்படல்*

வேட்டுவர் வேடர் விறல்மிகு பூவலர்
துட்டரை வெல்லும் துய்ய காவலரும்

மாவல ருடனே வகுத்தஞ்சு குலத்தார்
யாவரும் பயண மாகவே நீயும்

பேரிகை அடியென்று பூசுரர் உரைக்க
தீரன் மன்னவன் செலுத்தினான் முரசு.

## *படை புறப்பட்ட காலம்*

எழில்சேர் கலியுகம் இரண்டா யிரத்துடன்
வளரும் எழுநூறின்மேல் வருஷம் பிரமாதியில்

உத்தரா யணமும் உயர்மக ரத்தில்
சித்திரைத் தசமி செழித்திடும் நாளில்.

### குலகுரு புறப்படும் காட்சி

திருவளர் உமாபதித் தேசிகர் தாமும்
இறையவன் பாதம் இருதயத் திருத்தி

ஈசனார் துணையென்று ஏறினார் சிவிகை
வாசிமேல் கொண்டார் மறையவர்க்கு இளையோன்

சிவிகையில் ஒருபுறம் தேசிகர் மந்திரம்
அம்சையால் துர்க்கை அங்கையில் ஏந்த

பின்புறம் கூளி பேய்களும் சுமக்க
இன்பமாய் வந்தார் எழில்மிகு பூசுரர்

வண்மைசேர் இடும்பன் மாதேசி இருவர்
வெண்குடை பிடித்தார் வேதியர் தமக்கு

தண்டிகை தன்னில் தக்கமன் னவர்கள்
எண்டிசை நடுங்க எழுந்து அரசர்

### படை செல்லும் காட்சி

ஏறியே வருக இத்தலம் அதிர
காருபார் செய்யக் கட்டியம் கூற

வாத்தியம் முழங்க மன்னவர் முன்னே
சாத்திய பேரிகை தணதண என்ன

மடங்கலின் துவசம் வாரணக் கொடியும்
அடங்கொணா மிருகம் யாளியின் கொடியும்

நாகக் கொடியும் நந்தியின் துவசம்
மேகவா கனம்போல் வேதக் கொடியும்

முரசுக் கொடியும் முன்னமே பிடிக்க
அரசர்கள் மறையோர் அனைவரும் வரவே

சிறந்திடும் சேனைகள் சேசே என்ன
கரங்களில் தாளம் கலீர்கலீர் என்ன

தித்திமத் தளமும் திமிதிமி என்ன
நற்றமி ழேந்தி நாவலர் புகழ

மன்னவர் மன்னவர் வளர்குரு குலத்தில்
தன்னிகர் இல்லாச் சத்திய மன்னவர்கள்

குருமொழி தவறாக் கொற்றவர் தாமும்
செருநரை வாட்டத் தென்திசை நோக்கி

வருகிறார் என்று வாத்தியம் முழங்க
குருஉமா பதியாம் கோசிகர்க்கு இளையோன்

கொங்கு வேதியரும் குருகுல மன்னரும்
எங்குளோர் புகழ ஏகினார் அன்னவர்

78. மன்னவர் திருக்கா ளத்தி
 மணிநகர் நீங்கி யாரும்
தன்னிகர் இல்லா வேந்தர்
 சண்முகன் உடும்பை தங்கி
அன்னவர் சென்றி றைஞ்சி
 அரன்பதம் வணங்கிப் போற்றி
பொன்னகர் அருணை ஈசன்
 பொற்பதம் பணிந்து நின்றார்.

### *வழியில் கள்ளரை எதிர்த்துப்போர்*

79. தினகரன் உதிக்க வேந்தர்
 சேனையோ டெழுந்து செல்ல
கனமிகு வலையர் வாழும்
 காய்ப்பிரி மலையில் வந்தார்
வனந்தனில் இருந்து கள்ளர்
 வந்தவர் தொடரக் கண்டு
நினைவினில் குருவைப் போற்றி
 நேர்ந்துபோர் விளைத்திட் டாரே.

## *வெற்றி பெறல்*

80. அமர்செய்ய வந்த கள்ளர்
அனைவரை வளைத்துக் கொண்டு
சமரினில் கருவ றுத்தார்
தக்கவர் குலத்துள் ளார்கள்
நமக்கெதிர் உண்டோ இன்னம்
நவிலுவீர் மறையோர் என்று
நிமைக்குமுன் பவுதை ஆத்தூர்
நேர்ந்தவர் கடந்து சென்றார்.

## *வெள்ளாறையில் மடம் அமைத்தல்*

81. சென்றுவெள் ளாறை தன்னில்
சேனையோ டிறங்கி வேந்தர்
நன்றிது வசதி யாக்கும்
நம்குல குருவுக் கென்று
நின்றொரு மடமுண் டாக்கி
நிமலரைத் துதித்துச் செல்வம்
குன்றில்லாக் குருவின் தம்பி
கோசிகன் தனைஅ மைத்தார்.

82. அங்கவர் தனைய மர்த்தி
அந்நகர் தேசம் தன்னில்
பங்கமில் லாத வேந்தர்
பத்துநல் வீரர் நூறு
மங்கள மாக நீங்கள்
வாழ்ந்திரும் எனஉ ரைத்து
சிங்கம்போல் வீர வேந்தர்
சென்றனர் குருவி னூடே

## *வெண்பா*

83. திடங்கொண்டு சங்ககிரி செய்யபுகழ் ராசிபுரம்
இடங்கண்டு சேலத் திறங்கி - மடங்கலெனச்

சென்றார்நா மக்கல்லூர் சேர்ந்துமுத்தா நதிமேற்கு
நின்றார் இடையாறி னில்.

### குலகுரு வீற்றிருக்கும் இடம் - இடையாறு

84. பொன்னிநதி தெற்கு புகழ்முத்தா நதிகிழக்கு
நண்ணியதோர் சங்குமுகம் நன்றாய் - கண்ணர்பதம்
போற்றி யருள்பெருகும் புகழும் குருசுவாமி
வீற்றிருக்க நல்லஇட மே.

### இடையாற்றில் குருமடம் சிறப்பு

85. இங்கிருந்து காளத்தி ஈசர் பதம்போற்றி
நங்கள் குலம்விளங்க நண்ணுவார் - மங்களமாய்
இத்தலத்தில் தானே இவர்க்குமணி மேடைகளும்
எத்தணித்துச் செய்தார்க ளே.

86. தேசிகர் உமாபதியாம் செய்யபுகழ் பூசுரற்கு
வாசமுடன் வீற்றிருக்க மண்டபமும் - நேசமுடன்
செம்பொன் மணியால் சிம்மா சனமீந்து
இன்பமுட னேமகிழ்ந்தா ரே.

87. உவகையால் மன்னர் தாமும்
உமாபதி குருவைப் போற்றி
தவமிகுந் தெழில்சேர் வேத
சற்குரு நாதர் நீரும்
பவமகற் றியதோர் பொன்னி
பரவிய நதியில் மூழ்கி
நவமணி தனில்இ ழைத்த
ரத்தினமண் டபத்தில் தானே

88. துங்கமே மிகுந்த ஈசர்
துணைமலர்த் தாளில் நித்தம்
நங்குலம் விளங்க வேண்டி
நன்மலர் சாற்றிப் பூசை

இங்கிதத் துடனே செய்து
இருந்திட வேண்டும் யாமும்
கொங்குமாற் றலரை வென்று
கொற்றமே மிகுத்து வாரோம்.

### குலகுரு ஆசி

89. என்றுமன் னவர்கள் கூற
எழில்உமா பதியார் தாமும்
நன்றென நகைத்து நீங்கள்
நன்னலர் தனைச்செ யித்து
வென்றிவண் வருவீர் என்று
விடைநல்கி நீறு தந்தார்
பொன்றிடா வரமென் றெண்ணி
போற்றினார் புகழ்மி குத்தோர்.

### குலகுருவிற்குக் காவல்

90. சென்றுநாம் வருகு மட்டும்
தேசிகர் மனையைச் சுற்றி
வன்றிற லாகக் காப்பீர்
மாற்றலர் அணுகி டாமல்
என்றிரு வள்ளம் சேனை
இருத்தியென் றுரைத்துப் பின்னும்
குன்றென நிகர்த்த தோளான்
குருகுல வேந்தன் சொல்வான்

### அல்லாள இளையானை பரமத்தியில் இருத்தல்

91. அன்னவர் தம்மில் சூரன்
அல்லாள இளைய மன்னன்
தன்னையே நோக்கி நீயும்
தகைமைசேர் அரைய நாட்டில்

பன்னிய அடியார்க்கு எல்லாம்
பரன்முத்தி தரும்அவ் வூரில்
திண்ணிய சேனை யோடும்
சுகமுடன் வாழி யென்ன

92. நிறையும் ஞானமும் தர்மமும் நீதியும் நெறியாய்
மறைய வர்க்கிடர் அகற்றியே மாநிலம் மதிக்க
குருவு மாபதி தேசிகர் தாளில்கை குவித்து
தரணி தன்னிலே சந்ததம் பெருகிவாழ்ந் திருப்பாய்.

## குருகுலராசன் பயணம்

93. என்றவர்க்கு இனிது கூறி
எழில்மறை யோர்கள் சூழ
வன்றிறல் வாகை கொண்ட
வயவர்கள் மீதில் செல்ல
குன்றென வலிய தோளான்
குருகுல வேந்தர் வேந்தன்
நன்றிது வேளை என்று
நதிதனைத் தாண்டி னானே.

## கரூர் அடைதல், ஒற்றரை அனுப்பல்

94. பொன்னிமா நதியும் தாண்டி
புகழணி கொண்ட ராசன்
நன்னயக் கருவூர் தன்னில்
நாடியே இருந்த காலை
பன்னகா பரணன் ஆன
பசுபதி பாதம் பேற்றி
ஒன்னலர் மீதில் செல்ல
ஒற்றரை விடுத்தி ருந்தான்.

95. ஒற்றர்கள் ஓடிச் சொல்ல
ஒன்னலர் மனம கிழ்ந்து

கொற்றமெய்த் திடுவார் காணோம்
கொங்கினில் இதுவ ரைக்கும்
இற்றைநாள் அணைந்த தேதென்று
ஏகினார் அனைவர் சூழ
நற்றமிழ் தெளிந்த மன்னன்
நண்ணலர் மீதிற் சென்றான்.

## *சல்லியன் ஒட்டியனோடு போர்*

96. முடலைப் பவுரவர் அருந்திறல் முனைமுப் புரவலரும்
விடலைச் சல்லியனும் வெம்படை மிகுமொட் டியத்திறலும்
வடவைக் கனலெனவும் புரையுற வைப்பிரு தளமும்
தடமொய்ப் புடன்எதிர் நின்றனர் சயவிரகொடு பொருத

97. தானைத் திரளொடு தானைகள் தாக்கிச் சமர்புரிய
ஆனைத் தொகையுடன் ஆனைகளால் துற்றய பலமும்
மோனைத் திறல்வரொடும் ஓய சீற்றத் திறலவரும்
சோனைப் புயலென வாளிகளால் உற்றனர் சொரிய

98. உதிரத்திலு மசுரத்திலும் உயர்வாரிலு மதினோர்
வதனத்திலு வேணுக்கணைப் பவானதி யெனவே
உதிரப்புனல் ஓடப்புலவு கண்மூளைகள் சிதற
எதிரிட்டன வேலுய்த்தன இகலார்சிலர் படவே

99. வெம்பத்திரி யும்தொட்டு மிடைந்துத் துமிரைந்தே
வம்பிற்பொதுச் சந்துசல்லியன் பக்கலில் மகிழ்ந்தோர்
மொய்ம்பற்றது அறிந்தொட்டியன் வெம்பித்தோன் முரண்டோர்
தும்பைத்திறல் பொன்றச்சோ ருடங்கிச்சமர் கொண்டார்

100. ஒட்டியன் படைதிரண்டேக அதைஒருமித் தெரிந்தனர்கள்
குட்டிரண்டிலும் நினைந்தே அலைகின்றமர் புரிந்தனர்கள்
எட்டிநின்று யாரென்றான் மலரிதையத் திசைந்தனர்கள்
நட்டுமுன் துவசமும் கீழ்விழ நடுவற்றவர் பதர

## போர் நிகழ்ச்சி, வெற்றி

101. விசையக் கவுரவர் சக்கரம் விசையுற் றெறிகுனரால்
வசைஒட்டியன் வலுமைப் படைசில பட்டன வதையாத்
திசையுற்றருள் குருதிப் புணரணி மொய்குறள் கடிதோய்
பசியைத் தொலைவுறல் எட்டிசை மதுகைப் பவுரவர்மேல்

102. வச்சிரப் படையோன் உக்கரம்வலம் நல்கிடவென்று
அச்சுதன் திருமருகன் தனதாளிப் படைகொண்டு
முச்சிரத்து அவுணேசன் திருவுடல் கீறியவாறுபோல்
நச்சரப் படைமிகும் ஒட்டியர் நலிவுற்றன ரன்றே.

103. ஆறு மாமுகத் தெம்பிரான் அயிலொடும் சென்று
சூர னாருயிர் துலைத்தன ரவ்வாறு போல்துங்க
மேரு போல்நிகர் குருகுல வேந்தனும் விரைவில்
மாறு செய்திடும் சல்லியப் படைகளை வதைத்தார்.

104. அடங்கொ ணாஅச் சல்லியன் படைகளை வதைத்தும்
திடங்கொள் வேலினுள் முறைமுறை யவரொடும் சீறி
நெடிய மால்என நேரலர் யாரையும் வென்று
மடங்க லாமென நின்றனன் முத்தணி மன்னன்.

105. குருகுல மன்னவர் கோட்டைத் துளாவரையும்
மருவுல வமட்டரையின் மட்டும் - விறல்மிகுந்து
சென்றார்கள் ஒன்னலரைச் சேரக் கருவறுத்து
வென்றார்கள் முன்னவரு மே.

## கொங்கு மன்னர் மகிழ்ச்சி

106. கவடு செய்திடு பகைஞரை வென்றதோர் களிப்பால்
குவடும் தேயமும் அளித்தனர் காணியாய்க் கொடுத்தார்
பவமும் தோசமும் அகற்றிய வாறுபோல் பாரில்
உவகை யால்மறை யவர்மன மகிழ்ந்தவ ருற்றார்.

## வென்ற குருகுலர் கருவூரில் தங்கல்

107. கொற்ற மிக்கதோர் முத்தணி மன்னனும் குலத்தோர்
சுற்று தானையோ டெழுந்தனர் மாற்றலர் தொகையைப்
பற்றி வேரொடும் துண்ணென வீட்டினர் பண்பாய்
வெற்றி கொண்டு மீண்டனர் கருவூரிடை வேந்தர்

## கொங்கு அரசர் குருகுலர் வரலாறு கேட்டல்

108. மறைய வர்தொகை யாவரும் மன்னனும் மகிழ்ந்து
அரியெ னப்படும் ஆசனத்து இருந்திடும் அன்னாள்
குருகு லத்துமன் னவன்முகம் நோக்கிஎன் கோவே
மரபின் வன்மையைச் சாற்றினை என்றனர் மறையோர்.

## முத்தணிராசன் குருகுலர் வரலாறு கூறல்

109. அன்ன பான்மையைக் கேட்டலும் அரசனும் மகிழ்ந்து
பொன்னின் மாமுடி துலக்கிய பூசுர வேந்தே
முன்னம் நம்குரு குலமுறை யிதுஎன உமக்கு
இன்ன வைகலே உரைக்குதும் யாமென இசைத்தார்.

## குரு, புரூரவன்
## தக்கை

110. விண்ணோர் தமது மென்குரு பன்னியாய் விளங்கும்
வனப்புயர் தாரைபெற்ற
பண்ணார் தனிப்புந் தியினை மின்னுடன் கூடிப்
பயின்ற புரூரவனும்
தண்ணார் எழில்கொங்கை உருவசியைத் தழுவியீன்ற
சொல்லாய் இம்மன்னன்
மண்ணோர் புகழ்ந்திடும் பிறவையென் னும்மாதை
அணைந்திட அவன்பயின்ற

## நகுலன், ஆதி, எது, வசு

111. நகுல ராசனும் திறல்பொருந்தி
நாக வல்லியைத் தான்புணர்ந்து

புகழ்தோன் றிடஅவள் பயின்றெடுத்த
பொறுமை யாதிமன் னவனொருகோள்
மகுடங் கவித்தலும் தெவியானையை
வதுவை புரிந்தணைந் துடனல்கிய
மிகுநன் னெறிமுறை யெது மன்னனும்
வெவ்வே லுடைத்தனி வசுவேந்தனும்

***இயக்கராசன், மயூசி, மனுத்துரு***

112. அரக்கர் கோன்பரு வரவுகர்த்த
தமியள் சன்மிஷ்டை தனைஅணைந்து
சுரக்கு மயூசியு மனுத்துருவு
துலங்க வேஇவர் தமையளித்தாள்
உரக்கும் அவுணர்தன் குருவருளும்
தெய்வ யானையின் சுதரோடவர்
புரக்கும் பார்புகழ்ந் தேற்றியொன்னார்
மவுலி யுருஞ்சுதாள் புரவலரில்

***சனமேயன், பிரிதி, பிரவீரன், நமசிவன், சாருமன், சுதத்துய்மன், சயயாதி***

113. தீய அசுரர்கள் ஏந்தல்மகன்
சேய புரூரவனருள் சனமேயன்
தூய அவன்மகன் பிரிதியெனும்
தோன்றல் தரும்பிர வீரநல்கும்
மேய நமசிவன் சுதன்சாருமன்
வேந்தன் காதலன் சுதத்துய்மன்
ஆய புரவலர் முனையேரகரம்
அன்னோன் அளித்த சயயாதிமன்னன்

***பியாதி, திராசுரன், தந்திரி, கேதாரி, துற்சந்தன், பரதன், அர்த்திகோன், குரு***

114. மற்றும் அவன்தரு பியாதியண்ணல்
மருவாம் அடல்திரா சுரன்சேயன்

சொற்ற தேயுமன்னருள் தந்திரியாம்
அவன்சுதன் தொல்கே தாரியிறை
பெற்ற துற்சந்தன் அனையோனும்
பரதனவன் செம்மல் பேரர்த்திகோன்
வெற்றி மதலையென் குருவரசன்
விளங்கிய அவனியைப் புரக்குமன்னாள்

***சகத்திரசித், சதசித், காளைகேயன், தருமன், தருமவேந்திரன், கீர்த்தி, சஞ்ஞுக்கீயன்***

115. தேவதா ளைபுத்திரன் யெதுவின்மைந்தன்
சகத்திர சித்தவன் குமரன்
மேவ லார்தொழும் சதசித்தெனும்
வேந்தன் காளைகே யன்புதல்வன்
யாவர் புகழ்தரு மன்தனையன்
தரும வேந்திரன் ஆங்கவன்சேய்
மாவ லாரியை நிகர்கீர்த்தி
மன்னன் மகன்சஞ்ஞுக் கீயன்எனும்கோன்.

***வயிட்டுமான், புத்திரசிரோன்மணி கிருதவீரியன், கார்த்தவீரியன், சயத்துவசன்***

116. ஈன்ற வயிட்டு மான்பயந்த
புத்திர சிரோன்மணி யெனும்வேந்தன்
ஆன்ற அவன்செம்மல் தகைமன்னன்
அளித்த கிருதவீரி யன்காவலன்
தோன்றல் புவிபோது வன்திகரி
உருட்டும் கார்த்த வீரியன்சுதன்
நான்ற புனைக்கைமா அமரில்ஒன்னார்
நடுங்கும் கிரணவேல் சயத்துவசன்

***காலசங்கன், தன்னகுமரன், வீதிகோத்திரன், உடையனந்தன், துற்சயன்***

117. அண்ணல் குரிசில்சந் ததிமுழுதும்
அவனி காத்திடும் காலசங்கன்

தன்ன குமரன்வெஞ் சிலைத் தடக்கை
வீதி கோத்திரன் எனும்தலைவன்
துன்ன லார்தொழும் அவன்மதலை
சுடர்நெட் டிலைவைவேல் உடையனந்தன்
மன்னர் திலகம் எனப்பயந்த
நெறிவளர் மணிமுடி துற்சயன்

### *சுப்பிரிதி*

118. தவந்தனில் உதித்தசுப் பிரிதிமன்னன்
தானையுடன் வேட்டைக்கு இனிதெழுந்தான்
நிவந்த கிரியிடை யளுவமேந்தி
நின்ற பொழுதிலோர் இயக்கன்பெற்ற
சிவந்த மலர்முக வாட்கருங்கண்
திருவன் னாளங்கண் மகிழ்ந்ததிர்ந்தான்
உவந்த நிருபன்கண் டுருவிலிவெஞ்
சரத்தால் உழன்றவன் தோய்ந்தகன்றான்

119. வயங்கு மணிமுடி யுளவனுந்தன்
நகரி யடைந்த னன்இயக்கன்
தயங்கும் கருப்பங்கொண் டுயர்ந்தனனோர்
தையல் தனைக்குரு குலம்விளங்க
இயங்கும் கலைமதி யெனவளர்ந்தும்
இரதி யனையபொற் புடைத்தெருவை
முயங்கும் கோமதி நதியருகில்
சூழல் முறைமுறை வருங்காலை

### *குருவரசன், இயக்கராசன்*

120. முன்னம் நாம்சொன்ன குருவரசன்
முடிவில் கோமதிக் கரையில்நண்ணி
மன்னன் தழுவிய இயக்கிமகள்
வரக்கண் டவள்முலை நலங்கூர்ந்தான்

அன்னன் வயின்வந்தான் செருவிலொன்னார்
உதிரம் அருந்துமன் னிலைசுடர்வேல்
துன்னும் திறல்வாகை முனைஇயக்க
ராசன் எனும்பெய ருடைத்தோன்றல்

121. உத்திர திசையிற்சென் றான்தவங்கள்
புரிய யோசனை நூற்றுக்கப்பால்
கித்திரம் திகழ்ந்த அருங்கானில்
கிரியின் இடத்தெழுந் தேஇருந்தான்
அத்திரம் உறமும் என்றறிந்து
யாமுந்தன் உரைத்த அன்னாள்
புத்திரன் அனுக்கிளை மிலேச்சர்குலம்
பூவைக் கவிஞ்சிவந் தனள்அவன்பால்

## *பத்து மக்கள் முதல்வன் சூரன்*

122. யோகி னிருந்தவன் உணர்வழிந்தாங்கு
அடைந்த கவுஞ்சியை வந்தணைந்தான்
பாகல் மொழியினள் சூலுளைந்து
பன்னென் றாடவர் தனைப்பயந்தாள்
போகி யனையமைந் தரில் சூரன்
போத மோர்ந் தடவினுற்றான்
நாகில் உயர்இயக் கியர்உழைப்பால்
நடந்தான் காவதம் சிலகடந்தே

123. முனிவர் ஆச்சிரமந் தெரிந்திலங்க
முன்னிச் சரிக்கும்அவ் வனத்தில்ஒன்னார்
குனிவெஞ் சிலைச்செரு வேடர்குலக்
கோதையவளைக் கண்டனன் அனங்கனம்பால்
தனிமையாய் எதிர்ந்தனள் தடுப்பத்
தலைவன் வினவிலும் எமைப்புலகேன்
இனியவள் வினையீ தென்றெண்ணி
இசைந்து தழுவினன் சிலகாலம்.

## நாகன், திண்ணியன்

124. புளினர்மடந்தை பெற்றனள் குலம்தழைக்க
புகழ்கொள் புத்திரர் பதின்மர்
நளின முயரம்பு ராசிசுழல்
ஞாலந் தொருமிவர் பெருகினரால்
மொழியும் குருகுலர் பதின்மர்இந்த
உதிரத்தவன் நாக மன்னன்
வளமை யாயிவன் பயின்றெடுத்த
மன்னன் திண்ணிய மகிபாலன்.

## திண்ணியன் வேட்டைக்குச் செல்லல்

## - காளத்தி ஈசர் வழிபாடு

125. காவ னத்தினில் வேட்டைவர
காளத்தி ஈசர் தனைத்தொழுது
நாவில் சுவையுள்ள இறைச்சிகளை
நான்தரு வன்என் றேயிறைஞ்சி
மூவி ரண்டாந் தினந்தனிலே
முறையே அரன்பூசை செய்யவென்று
ஆவ லாய்ச்சுவை இறைச்சிகளை
அவன ருந்திய சேசங்களும்

## காளத்தி ஈசர்க்குப் படையல்

126. உச்சிக் கொண்டையில் எருக்கலம்பூ
உமிழும் வாயில் கெங்காசலம்
கைச்சி லையும் இறைச்சியுடன்
காலில் மிதியடித் தோலுடனே
நச்ச ராவணி ஈசருடை
நல்கு மாளிகை அருகில்வந்து
முச்சக்க தாளி னால்உதைக்க
முன்க பாடம் திறந்தனவே

## *திண்ணன் வழிபாடு, கண்அளித்தல்*

127. வாச மலர்தாளி னால்விலக்கி
வாயில் நீர்வர மீதில்விட்டு
நேச முடன்சிரப் பூவளித்து
நீட்டி னான்கை இறைச்சிஎன்றான்
ஆசை யுடன்அவர் ஊன்அருந்த
அரனார்க்கு ஒருகண் ஒழுகினவால்
மோச மென்றொரு கண்பிடுங்கி
முன்பு திண்ணன் அமைத்தனனால்.

## *திண்ணன் கண்ணப்பன் ஆதல்*

128. மற்றும் ஒருகண் இழிந்துவர
வல்லவன் ஒருகண் தான்பிடுங்க
நிற்றி யென்றான் மெய்மகிழ்ந்து
நேச முடனவர் மீதணைத்து
இற்றை உனதன்புக்கு அகமகிழ்ந்தோம்
எனது கண்ணப்பன் என்றுதழுவி
கொற்ற கோசரிக்கு இதுகூறிக்
குன்ற வில்லி மகிழ்ந்தனனால்.

## *கண்ணப்பன், விசையன், காளத்தி மன்னன்*

129. இன்ன தன்மையி னால்திண்ணன்
இனிய கண்ணப்பன் எனஆனான்
அன்னவன் அளித்த மைந்தன்
அழகிய விசையன் என்போன்
நன்னெறி உடைய பேதை
நாக வல்லியைப் புணர்ந்து
கன்னலின் சுவையாம் என்னக்
காளத்தி மன்னன் என்போன்

## காளத்திமன்னன் வேட்டை

130. இருந்திடும் போது கானில்
ஏகின வேட்டை யங்கே
பெருந்திரு வடிவம் போன்ற
பேதையங்கு இருக்கக் கண்டு
வருந்தினன் மோகம் மீறி
மாதையீன் றினிய தாதை
பொருந்திறல் வாகை கொண்டு
போர்விளைத் திட்ட காலை

## திட்டனை வெட்டுவேன் எனல்

131. திட்டனவ் வமரில் வல்ல
தீரன்கா ளத்தி மன்னன்
வெட்டுவன் என்று சீறி
வீசியே இருகூ றாக்கி
மட்டில்லாக் குழலி னாளை
வதுவையங் கியற்றி ஆர்த்துத்
துட்டகண் டகன்என்று ஓங்க
துலங்கிவாழ்ந் திருந்த தாலே

## வெட்டுவன் - வேட்டுவன் - அரணிய மன்னன்

132. ஆரண முனிவர் வானோர்
அரசரும் உவகை யோடு
வீரனென் றுள்ளி யென்றும்
வேட்டுவன் எனப்பேர் தந்தார்
தாரணி புரக்கும் மன்னன்
தையலைப் புணர்ந்து வாழ்ந்து
ஆரியன் ஈன்ற மைந்தன்
அரணிய மன்னன் ஆகும்.

## அரணிய மன்னன் மகன் முத்தணிராசன்

133. அரணிய மன்னன் தானும்
அப்பிநாட்டு இறைவன் ஆகி
தரணியில் பகையை நீக்கி
தன்னரசு ஆளும் நாளில்
விரைசெறி மாலை பூண்ட
மெல்லியாள் வயிற்று தித்து
முறையுடன் அரசு கொண்டேன்
முத்தணி ராசன் ஆனேன்.

## வசு உதங்கர்முனி வேள்வி காத்தல்

134. முன்னம் ஓதிய பதின்மரில் வசுவெனும் முதல்வோன்
தன்னை நேரிலர் திருத்திடு காலையில் தவத்தில்
முன்னர் மன்னனாம் உதங்கர்தனது அவ்வனம் வந்தான்
அன்னவன் தன்னை நோக்கி முன்னவன் அறைவான்

135. மன்ன கேளுநான் வேள்வியொன் றியற்றுதும் வனத்தில்
அன்ன காலையில் மாற்றலர் அணுகிவந் தலைப்பார்
மின்னும் வாட்படை வீரன்நீ செருநரை வென்று
உன்னும் வேள்வியை முடித்திட அருளென உரைத்தான்.

136. வரமுனி உரைத்த வார்த்தை
மன்னனும் முடியக் கேட்டுச்
சரணம்என்று அடியில் வீழ்ந்து
சுவாமிநீர் அஞ்ச வேண்டாம்
திறம்மிகு வேள்வி செய்யத்
தேவரீர்க்கு ஏவல் ஆளாய்
செருநர்வந் தணுகி டாமல்
சிறியன்நான் காப்பேன் என்றான்.

137. என்றவர்க்கு உரைத்து மன்னன்
எண்ணிரு நாள தாக

வன்திறல் வாகை வீரன்
மாற்றலர் தனைச்செ யித்து
நின்றிராப் பகலு மாக
நித்திரை ஊண் அகற்றி
மன்றலந் தொடையின் மார்பர்
வசுமன்னன் நின்றான் ஆங்கே.

## *காவலர்*

138. அத்தரு ணத்தில் ஆங்கே
அருந்தவ முனிஉ தங்கர்
முத்தனைப் பணிந்து போற்றி
முடித்தனர் வேள்வி தன்னை
வித்தக வீரன் நீயென்
வேள்வியைக் காத்த தாலே
அத்தனார் அருள்மி குந்து
அவனியுள் ளளவும் வாழ்வாய்.

139. வேள்வியைக் காத்த தாலே
வேந்தர் காவலன் நீயென்று
தாழ்வில்லா அருள்அ ளித்துத்
தவமுனி இருந்தார் ஆங்கே
கோளரி யனைய வேந்தன்
குவலயம் துதிக்க வாழ்ந்தான்
மீளவும் மரபுள் ளார்கள்
மிக்ககா வலராம் கண்டீர்.

## *பூவலர்*

140. அப்பதின் மரில்ச யந்தன்
அடையலர்க்கு அரசன் ஆகி
எப்புவ னத்து மேலாம்
ஈழதே சத்து மன்னன்
பொற்புர வியின்மீ தேறி
பூவலம் வந்த தாலே

அப்புர வியும்அ ழித்து
அவனியுள் ளளவும் தானே

141. பூவலன் எனப்பேர் கொடுத்தருளி
பூஷண வகைகளும் பொருந்தி
யாவரும் மகிழ்ந்து அரசனுமனுப்ப
அவனுமே பார்தனில் மேவி
ஓவியம் போலும் ஒண்டொடியாளை
உவந்தவன் வதுவையங் கியற்றி
ஆவலாய் ஈன்ற மரபினரெல்லாம்
அவனியில் பூவலர் ஆச்சே.

### *நகுடன், அணிலன்*

142. அங்கவற்கு இளவல் எழுவரில் நகுடன்
அணிலனும் ஒருங்குடன் ஏகி
எங்கணும் உலவி ரிஷிகட்கு ஏவல்
இயற்றியே நல்லருள் ஏற்றுத்
துங்கபத் திரியின் நதிக்கரு காகத்
தோன்றினர் இங்ஙனம் வைகும்
மங்கையர் இருவர் தங்களைக் கண்டு
மையலுற்று அரற்றினர் மயங்கி.

### *மாவலன் மகள் இருவர் மணம்*
### *தக்கை*

143. தையல் இருவரை ஈன்றெடுத்த
தாதை மணிமாலன் தனைக்குருகி
மையல் ஆகினோம் கன்னியர்மேல்
வதுவை எமக்கருள் என்றுரைத்தார்
அய்யர் என்குலம் விளங்குதற்கு
அரிவை மாரின்றி வேறுமில்லை
உய்யும் அவரொன்று சொல்லுவன்கேள்
உகந்த நன்மொழி ஓதுமென்றார்.

### மாவலர்

144. மச்சகந்தி யினைப்பயின்ற
மாவலன்தன் மரபில் உற்றேன்
நச்ச ராவணி ஈசர்அருள்
நங்கைமார் பயின்ற மைந்தர்
இச்சையாய் என்குலம் விளங்க
என்றுமே ஈசரும் அருள்கொடுத்தார்
அச்சம் இன்றி உமக்களிப்பேன்
அய்யனும் வாக்கால் கூறுமென்றான்.

145. நல்ல தென்றுஅவர் தாம்உரைத்து
நங்கைமார் இருவோர் களையும்
வல்ல குருகுலர் இருவருமாய்
வதுவை செய்தவர் வாழுகையில்
மெல்லியர் கள்இரு வோர்களுக்கும்
மேன்மை யான குலத்துதித்த
சொல்லும் மாவலன் குலம்விளங்க
தோன்றினர் ஏழு மைந்தர்களும்.

### வேடர் - ஐந்துகுலத் தோற்றம்

146. மற்ற ஐவரும் வேடர்குல
மாதர் தம்மை மணம்புரிந்து
சுற்ற மோடவர் வாழ்ந்திருந்தார்
துய்ய வேடர் குலம்விளங்க
வெற்றி யுள்ள குருகுலத்தின்
வேந்தர் மரபில் உதித்தவர்கள்
தோற்றம் ஐந்து குலமிதென்ன
சொன்னான் குருகுல வேந்தனுமே.

### அந்தணர் உரை

147. அந்தணர் இதனைக் கேட்டு
அனைவரும் உவகை யெய்தி

சுந்தர புருஷர் ஏறே
துலங்கவாழ்ந் திருப்பீர் எங்கள்
நிந்தனை யகற்றி வைத்தீர்
நேரலர் அணுகி டாமல்
எந்தனைப் பாது காத்து
இறையருள் துலங்கச் செய்தீர்

### *முத்தணிராசனும், அந்தணரும் உமாபதிக் குருவிடம் செல்லல்*

148. என்னும் அந்தணர் ஆசிகள் வழங்கியே யிருந்தார்
மன்னர் மன்னனாம் முத்தணி ராசனும் மகிழ்ந்து
என்னு நம்குல குருவிடம் செல்கென இசைத்து
அன்ன வைகலே எழுந்தனர் முரசுகள் அதிர.

### *இடையாறு குலகுரு மாளிகை அடைதல்*

149. குருகு லந்தனில் முத்தணி ராசனும் கொங்கில்
அரசி யற்றிய மறையவர் அனைவரும் அடர்ந்து
திருவு லாம்இடை யாறினில் தேசிகர் திவ்ய
அரவிந்த பாதம் பணிந்திட எழுந்தனர் அரசர்

150. பொன்னி மாநதி கடந்திடை யாறினில் புகுந்து
கன்னல் வாழைதேன் கமுகொடு பலாமரம் கதிர்சூழ்
தென்று லாவிய சோலையும் கடந்துதே சிகர்தன்
பொன்னு லாவிய மாளிகை யடைந்தனர் புத்தேர்.

### *குலகுரு வணக்கம்*

151. திருவு லாவிய மேடையில் நீறணி கடவுள்
அருளு லாவும் உமாபதி தேசிகர் அடியில்
மருவு லாவிய மன்னர்கள் முறைமுறை வணங்கி
இறைவ னேஎமைக் காருமென்று உரைத்தனர் எழிலாய்.

### *குலகுரு வாழ்த்து*

152. அய்யனார் திருவுளம் மகிழ்ந்து அரசரை அழைத்து
மைய்யு லாவிய கழுத்தினன் அருளில்மாற் றலர்கள்

உய்யும் யாரின்றி வென்றுமீண்டு இங்ஙனம் உரைத்தீர்
வைய்ய கந்தனில் வாழ்ந்திரும் என்றனர் மறையோர்.

153. கொங்கு தேச மன்னவர் மறையவர் குருகுலத்தில்
எங்கு ளோர்புகழ் முத்தணி ராசனும் இயல்பாய்
துங்க மிக்கதோர் குருவின் மாமலர் அடிதொழுது
அங்கண் வைகியே இருந்தனர் வருமுறை யறைவாம்.

## கஞ்சமலை தவராச பண்டிதரைக் காணச்செல்லல்

154. எங்கு ளோர்புகழ் கஞ்ச மலைதனில் இறைஞ்சி
மங்கை பாகனை மனத்தினில் இருத்திய மறையோன்
பங்க யன்மறை முற்றும் உணர்ந்திலன் இவர்பயின்ற
அங்கை யாலெடுத்து அகத்தியன் போலவுள் அமைத்தோன்

155. தேவர் கோன்முதல் வானவர் ரிஷிகளும் தேர்ந்து
நாவி னால்பயன் உரைத்திட அரிதென நவின்ற
மாவ லம்பெரு சாஸ்திரி மாரையும் வகுத்து
ஆவ லாய்த்தமது உளத்திடை இரும்என அமைத்தோன்

156. வைய்ய கந்தனில் அறிவதற்கு அரிதென வகுத்து
அய்யி ரண்டிரு நான்கெனும் புராணமற் றதுவும்
மெய்யு லாஎழு கோடிமந் திரங்களும் எளிதாய்
அய்ய னார்தமது உளத்திடை அமைத்தனர் அழகாய்

157. இன்ன தன்மையாய் முற்றுற உணர்ந்தனன் இறையோன்
பொன்ன டிக்கம லந்தனைப் போற்றியே புகழ்ந்து
முன்ன ரேஅயன் இவன்என மாநிலம் உரைக்கும்
மன்ன வன்தவ ராசபண் டிதன்எனும் மறையோன்

158. கோத்திர மறையவர் தங்களில் விளங்கிய தக்கோன்
மெத்த வும்புகழ் காசிபர் மரபினில் விளங்கி
அத்த னார்பதம் பணிந்தருள் பெருகியே அதனால்
பத்த னார்இவர் ஏழ்வர்க்கு நல்லருள் பகர்வார்.

159. அந்த ணர்இவர் ஏழுகோத் திரம்வரும் அவரைச்
சிந்த னைஅகற் றிடும்குரு இவரெனச் சிறந்து
வந்து பொன்னடி பணிந்தருள் பெருகிய மறையோர்
சந்த தத்துடன் வழங்கியே தரணியில் இருப்பார்.

## குலகுரு இடையாறு செல்லல்

160. தவமிகு மறையோர் இவ்வாறு
சதாசிவன் சரணம் போற்றி
அவமுழு தகற்றும் நஞ்சயர்
உபபாதத் திருக்கும் ஞானி
அவனியில் கொங்கு தேசத்து
அருமறை யவர்கள் பாலில்
கவனமாய்ச் செல்ல வேண்டி
கருத்தினில் நினைந்தெ ழுந்தார்.

161. துந்துமி மேள தாளம்
தொனித்திடச் சங்கம் ஊத
அந்தரத் தேவர் எல்லாம்
அணிமலர் மாலை தூவ
பைந்தமிழ் வாணர் கூடிப்
பற்பல கவிகள் பாடச்
சுந்தரம் மிகுந்த மாதர்
சோபனம் பாடி ஆர்த்தார்.

162. மன்னவர் கோடா கோடி
மகிழ்ந்தவர் சூழ்ந்து நிற்கப்
பொன்னடி புகழ்ந்து போற்றிப்
பூசரர் வேதம் ஓங்கத்
தன்னிகர் இல்லா ஞானி
சற்குரு மன்னர் தாமும்
தென்திசை வாரார் என்று
சின்னங்கள் ஊதித் தன்றே.

163. ஆனையில் ஒருநூ றாகும்
அடல்பரி இருநூ றாகும்
சேனையா யிரம்பேர் வீரர்
சிங்கம்போல் ஆர்த்துச் செல்ல
மோனமே மிகுந்த ஞானி
முத்தினால் சிவிகை தன்னில்
கானவிஞ் சையர்கள் மேவும்
கனகபீ டிகைஇ ழைத்தார்.

164. மடங்கலின் முகம்முன் பாலில்
மதகரி முகம்பின் பாலில்
திடங்கொள்ள அமைத்து வேதம்
சிந்தையில் தரித்த ஞானி
படங்கொண்ட சிவிகை தன்னில்
பரும்புலி யாச னத்தில்
விடம்உண்ட கண்டர் என்ன
விளங்கவந் திருந்தா ரன்றே.

165. மெய்யினில் நீறு சாற்றி
விமலனார் இவர்என்று உன்னக்
கையினில் உருத்தி ராக்கம்
கவசகுண் டலம்இ லங்க
துய்ய மேனியில் உருத்திராக்கம்
துலங்குதா வடமும் பூண்டு
சைவமா மறையோர் போற்றத்
தவமுனி எழுந்த வாறே.

166. குருமொழி சிரம்மேற் கொண்டு
கொற்றவே தியர்கட் கெல்லாம்
திருவருள் மிகுந்த செல்வம்
செழிக்கநீ திகள்செ லுத்தும்
மருமலர் வாசம் போன்ற
மல்லிகாற் சுனய்யர் மிக்க
கரியின்மேல் கொண்டார் வானோர்
கடிமலர் மாலை தூவ

167. அருந்தவ ராசர் ஏக
மடங்கலின் கொடிநி ழற்ற
சுருதியின் கொடிகள் ஆட
தும்பியின் துவசம் ஓங்க
முரசுயர் கொடிநி ழற்ற
முசுகுந்தக் கொடிமுன் ஆடத்
திருவுளம் மகிழ்ந்து ஞானி
தென்திசை நடந்தா ரன்றே.

168. பாலமே டதனில் தங்கி
பரமனை மனத்தில் உன்னிக்
காலையில் எழுந்து சென்று
கதித்தமுத் தாறு தாண்டி
ஞாலமே புகழும் பொன்னி
நண்ணிய இடையார் தன்னில்
சீலமோடு உறையும் ஞானி
தேசிகர் பதியில் வந்தார்.

169. வருகிற தறிந்து வேத
மறையவர் எழுந்து சென்று
அரனருள் பெருகி வாழும்
அருந்தவ ராசர் திவ்ய
மருமலர் அடியில் போற்றி
மனத்தனில் உவகை யோடும்
திருவெண்ணீர் வாங்கிச் சாற்றித்
திருமனைக்கு அழைத்து வந்தார்.

## குலகுருவை வணங்கல்

170. நவமணி தனில்இி ழைத்த
ரத்தினமண் டபத்தின் உள்ளே
தவமன்னர் வருதல் கண்டு
சதுர்மறை தேர்ந்து வானம்

புவனமும் கீழ்பெற் றோங்கும்
புகழ்உமா பதியார் தாமும்
அவனியாள் அரசர் கூட
அருந்தவர் முன்சென் றாரே.

171. இருவரும் எழுந்து கையால்
எழில்பெறத் தழுவிக் கொண்டு
கருணைசேர்ந் தினிய நாதர்
கருத்தினில் உவகை பொங்கி
திருவருள் சிறந்த சிம்மா
சனம்தனில் இருந்தார் அப்பால்
மருவலர் வாகை கொண்ட
மன்னனும் போற்றி செய்தான்.

### குலகுரு உரை

172. இருவரும் அரியின் பீடத்து
இருந்துகா ளத்தி யீசர்
அருள்பெறு ஞானம் தீர்ந்த
அந்தணர் முகத்தை நோக்கி
குறைவிலா நிதிபெற் றோங்கும்
கொங்குநன் னகர்அ லைத்த
செருநரை அழிவு செய்தீர்
செய்கையிற் பெரியோர் நீரே.

173. வேதியர் கலக்கம் தீர்ந்து
மேதினிக்கு அரசு தந்தீர்
நாதனே கொங்கு தேசம்
நாலாறு காணி யாக
பூதலம் வானம் அண்டம்
புவனங்கள் உள்ள மட்டும்
நீதியாய் உமக்குத் தந்தார்
நீடூழி காலம் வாழ்வீர்.

## குரு - அந்தணர் ஒன்றெனல்

174. இன்ன தன்மையால் தவமுனி உரைத்திட மறையோர்
மன்னன் மாமுகம் நோக்கியே உமாபதி மறையோர்
என்னு நாமெனும் இரண்டிலை ஒன்றென இசைந்தோம்
உன்னு மாமதிள் வயிரமு மாமென உற்றோம்

175. இங்கெ மக்கும் அங்குஅவ ருக்குமோர் வரிசையதாய்
நங்கு லத்தவர் யாவரும் நடத்துவீர் நாமும்
மங்க ளம்பெறு கொங்குநா லாறினில் வானோர்
தங்க ளாலயம் விளங்குபிர திஷ்டையும் தந்தோம்.

176. தேவ ராலயம் விளங்கும் செய்கையில் தேசம்
யாவ ரும்அவர் ஆகம விதிப்படி யருள்வார்
நீவிர் யாரேனும் இகழ்ந்திடில் நம்மையி கழ்ந்ததொக்கும்
மூவர் சாட்சியாய் உரைத்தமென் றுரைத்தனர் முதல்வன்.

177. அந்த ணர்க்கிவை சாற்றியே அரசரை நோக்கி
இந்த நற்புவி யாவையும் உங்களுக்கு இயல்பாய்
தந்த நம்மறை யோர்களுக் கிடர்வினை தவிழ்த்து
எந்த நாளிலும் நேசமோ டிருத்தியென் றிசைத்தார்.

178. அருந்த வத்தின்மன் னவன்இவை சாற்றலும் அதனைக்
குருகு லத்திறை யாவரும் கேட்டுளம் கூர்ந்து
பரிந்து புங்கவர் அடியினைப் போற்றியே பண்பாய்
பெருமொ ழிப்பயன் கேள்என மன்னவர் உரைப்பார்.

## அந்தணர் - தந்தை, குருகுலர் - மக்கள்

179. அந்த ணர்இவர் யாவரும் தாதையாம் அவற்குச்
சுந்த ரம்மிகு நம்குலத் தவர்எலாம் சுதனாய்
எந்த நாளினும் பிசகுவ தில்லையாம் இதற்குக்
கந்த னார்பதம் அறிந்திடக் கூறினம் கண்டீர்.

## குலகுருவுக்குத் தீது செய்யேல்

180. பூத லந்தனை அருளிய பூசுரர் தமக்குச்
சூது வஞ்சனை குலக்கள வாகிய தோசம்
யேதே னும்குரு குலமரபு உள்ளநாள் அளவும்
தீது செய்தவர் அந்தக நரகிடைச் சேர்வார்.

181. எந்த நாளிலும் அந்தணர்க்கு இடர்விளைத் திடுவோர்
அந்தம் உற்றநாள் நரகிடை வீழ்தலும் அன்றிக்
சுந்த ரப்பெரும் பசுவினைத் தூயமா நதியில்
கந்த ரத்தினை துண்டித் தவன்பெறும் கதியாம்.

182. உறுதி யாகிய மொழியினை மன்னவர் உரைக்கச்
சுருதியா கிரவயும் தேர்ந்தருள் பெருகிய தூயோன்
நிறைபு ரிந்திடும் குருகுல வேந்தரே நீரும்
மறையு ணர்ந்திடும் வேதியர் வேந்தரும் வாழி.

183. தாதை யென்னும் தவமுனி இவ்வகை சாற்றிப்
பூத லம்தனை ஆளெனப் பூசுரர்க்கு அருளி
வேத னார்என விளங்கும் உமாபதி முகமேவிக்
காதல் சேர்நகர்க்கு ஏகிட நினைந்தனம் கண்டீர்.

## தவராசபண்டிதர் கஞ்சமலை செல்லல்

### தக்கை

184. கஞ்ச மலைதனக்கு ஏகவென்று
கருதித் தவராச பண்டிதரும்
தஞ்சமென்று அவர்க்கு அருள்புரியும்
தவம்மி குந்த உமாபதியை
நெஞ்சில் மிகமகிழ்ந் தேயணைத்து
நேசம் மறவா திரும்எனவே
விஞ்சை யர்முனி வோர்களும்
வெற்பினுக் கேக வேணுமென்றார்

185. நல்ல தென்று உமாபதியும்
நாதர் தம்மைத் தழுவிக்கொண்டு

செல்லு மென்று விடைகொடுத்தார்
சேனை அனைவரும் பயணமென்றார்
வில்லவன் தேசம் ஆளுகின்ற
வேதி யர்கள் மனமகிழ்ந்து
வல்ல வன்தவ மன்னனும்
வரிசை நிதிசெம் பொன்கரியும்

## *மறையவர் குலகுருவிற்குக் காணிக்கை செலுத்த கஞ்சமலை செல்லல்*

186. ஒன்பது வகையான ரத்தினங்கள்
ஒக்கவே குவித்தே மறையோர்
இன்பமாய் மகிழ்ந்தே எடுத்து
எங்கள் தவமன்னர் பாதமதில்
முன்பு வைத்துஇரு கைகுவித்து
மொழியும் நல்வரம் என்றுரைத்தார்
அன்பு மிகுந்த தவமுனியும்
அவனியில் என்றும் வாழ்ந்திருப்பீர்

187. என்று மலர்க்கையால் நீறெடுத்து
எழில்சேர் மறையவர் தமக்கீய்ந்து
சென்று சிவிகையின் மீதிருந்து
சேனை அனைவர் நடவுமென்று
வென்றி புகழ்முத்தா நதிவிடுத்து
மேவு நாமக் கல்கடந்து
அன்று ராசீ புரத்திருந்து
அடர்ந்து கஞ்ச மலைக்குவந்தார்

188. வந்து தவமன்னன் அனுதினமும்
மயேசுரர் பூசை தவறாமல்
சிந்தை மகிழ்வுட னேபணிந்து
செகக் குருவென வாழ்ந்திருந்தார்
அந்தணர் கொங்கு தேசமதில்
ஆறில் ஒன்று கடமைகொண்டு

சந்த தத்துட னேமகிழ்ந்து
தரணி தனையாண் டிருந்தனரே.

## துர்க்கை பொன்னழகி குருவைப் போற்றல்

189. இப்படி யனந்தரம் இருக்க
எழில்உ மாபதி தேசிகர்தன்
மெய்ப்ப தான சிவிகைதனை
விறலு டன்எடுத் தேகிவந்த
செப்ப மானபொன் னழகியெனும்
செய்ய துர்க்கை யுடன்பூதம்
ஒப்பி லாமறை யவன்பாதம்
உண்மை யாய்ப்பணிந் தேயுரைப்பார்.

190. வேத வேதியர் கட்கெல்லாம்
மெய்ப்பொருள் ஆன சோதி
நாதனே அடியார்க் கெல்லாம்
நற்பதம் அளிப்பாய் போற்றி
பூதலம் தன்னில் உள்ளோர்
புகழ்குரு சாமி உந்தன்
பாதமே தொழும்எ மக்கு
பயனுரை சொல்லு மென்றார்.

## இடையாற்றின் வடகிழக்கில் துர்க்கையாகப் பொன்னழகியைத் தங்கச் சொல்லல்

191. புரமெரித் தருளும் நாதன்
புங்கவன் முடிமேல் சூடி
அருள்மிகுந் தெழில்சேர் ஞானி
அந்தணர் உவகை யோடும்
இருமென உரைத்து இவ்வூர்
ஈசான பாகம் தன்னில்
மருவலர் அணுகி டாமல்
மகிழ்ச்சியோ டிருந்து வாழ்வாய்.

192. கொற்றம் மிக்கதோர் முத்தணி மன்னவர் குலத்தோர்
வெற்றி கொண்டிடும் தேசமட் டுந்தனை மேவி
பற்றி யாய்ப்பணிந் தேற்றவர் பாலனம் படைப்பார்
நற்பு விக்கொரு துர்க்கையாய் இருமென நவின்றார்.

### பொன்னழகி குருகுலர் குலதெய்வம்

193. குருகு லத்தவர் குலதெய்வம் நீயெனக் குறுகி
மரும லர்கொடு சாற்றியே மலர்ப்பதம் பணிவார்
அருள்கொ டுத்துநீ அவனியில் இரும்என அளித்தார்
விறல்ப டைத்திடும் உமாபதி தேசிகர் மிகவே

### பொன்னழகி துர்க்கை அருள்

194. அன்ன பான்மையில் துர்க்கையும் அவனிகள் தோறும்
பொன்ம லர்ப்பதம் பணிந்தவர்க்கு அருள்கதி புகன்று
வர்ண மாகிய சாதிகள் அனைவர்க்கும் வரங்கள்
பன்னி யேஇருந் தனள்நகர் எங்கணும் பரவி.

### கருப்பனைத் தென்மேற்கில் தங்கச் செய்தல்

195. பண்ட ரக்குரு நீறணி கருப்பனைப் புகழ்ந்து
தண்டி கைக்கதி பதியென நம்மிடம் சார்ந்தாய்
மண்ட லம்புகழ் பொன்னிமுத் தாநதி மருங்கில்
எண்டி சைக்கதி சூரனாய் இருமென இசைத்தார்

196. இத்தி றத்தவர்க்கு அன்புள நேசனாய் இருந்து
பத்தி செயும்உமா பதிதேசிகன் தன்முகம் பார்த்து
நித்த னைப்பணிந் தேற்றிய நிருதியம் பாலில்
எத்தி றனும்அ டங்கலர் என்னவீற் றிருப்பாய்.

### இடும்பனை வடதிசையில் தங்கச் செய்தல்

197. அங்கம் மீதினில் நீறுகண் டிகையினை அணிவோன்
எங்கள் நாயகன் நந்தனைப் பணிந்திடும் இடும்பன்
மங்கை சூலினுக்கு ஏவலாய் உகந்திடும் அசுரன்
அங்க வன்தனை நோக்கியே பூசுரன் அறைவான்

198. சிந்து ரப்பலம் பொருந்திய சூரன்நீ திறலாய்
இந்த மாநகர் வடதிசைப் பாலினில் இருந்து
வந்து நின்னடி பணிந்தவர்க் கருள்நீதி வழங்கி
எந்த நாளினும் புகழ்ச்சியோ டிருமென இசைத்தார்.

## குலகுருவிடம் குருகுலர் வேண்டல்

199. ஈது நின்றிடக் குருகுல மன்னவர் எழுந்து
காதல் சேர்அருள் தங்கிய உமாபதி கமல
பாதம் மீதினில் நயனங்கள் தோய்ந்திடப் பணிந்து
நாத னேஎமக்கு உய்யுமாறு உரையென நவின்றார்.

200. மன்னவர் இவ்வகை உரைத்திட மயேசுரர் பாதம்
சென்னி மீதினில் சூடிய தேசிகர் தேர்ந்து
ஒன்ன லார்தமை அடங்கலும் வென்றனம் உலகில்
என்னும் வையகம் காணியாய் மறையவர்க்கு ஈந்தார்.

## கொங்கு எல்லை

201. வைகாவூர் தெற்கு வடக்குப் பெரும்பாலை
அய்யர் உறைவெள்ளி யங்கிரியும் - மெய்யாய்க்
குளித்தலை யின்மட்டும் கொங்குநக ரென்றுநமக்கு
அளித்தார்கள் காணி யவர்.

## கொங்கு வாழ்வு வேறு

202. ஆன தன்மையால் நீங்களும் அந்நகர் தோறும்
ஊனம் இல்லதோர் வாழ்வொடும் இருந்துஇந் நகரில்
ஞான மும்குணம் கல்வியும் நீதியும் நன்மை
ஆன சிந்தையோடு அறத்தையும் வழங்கிவாழ்ந் திருப்பீர்.

## குலகுரு கூற்று

203. ஆனதினால் நீங்கள் அறுநான்கு தேசமதில்
ஞானம் குணம்கல்வி நன்மையொடும் - வானுலகும்
பூமியுள்ள மட்டும் புரந்தரனைப் போலவே
நேம முடன்இருப்பீர் நீங்கள் - நாமும்

இங்கிருந்து பொன்னி இசைந்தமுத்தா நதியிரண்டு
சங்கு முகமதில் ஸ்நானம் - மங்களமாய்ச்

செய்து சிவனடியில் திவ்ய மலர்சாற்றி
அய்யர்அருள் பெற்றிங்கு அழகாய் - சைவநெறி

தப்பாமல் நாமிருப்போம் சந்ததம்மென் மேலும்வளர்ந்து
எப்போதும் இந்நகரில் என்றார் - அப்போது

## *சஞ்சாரத்தில் குலகுருவிற்குக் காணிக்கை*

மன்னர் எழுந்து மறையவரைப் போற்றிசெய்து
இன்னகரில் தானே இருந்தாலும் - மன்னவர்பால்

வருஷமொரு சாரி வந்தால் உமதடியைத்
தெரிசனங்கள் செய்து சிறப்பாய் - வரிசையென

தண்டிகையின் மன்னவர்கள் தக்கஜ நூறுபொன்னும்
வண்ட மதகரியின் மன்னவர்கள் - கண்டவுடன்

சிந்தை மகிழ்ந்து சிறப்பாய் இருநூறுபொன்
தந்து விடுவோம் தக்கவர்கள் - சிந்தையுடன்

மங்களமாய் நூறுபொன் வரிசையுட னேதருவோம்
எங்கிருக்கும் நம்கிளைகள் எல்லோரும் - சங்கியுடன்

வீட்டுக்கு இருபதுபொன் வேதியரே உந்தனுக்கு
தாட்டிகமாய் நாம்தருவோம் தப்பாமல் - வேட்டுவரோடு

## *திருமண வரி*

ஐந்து குலந்தனிலே யாவரே னும்வதுவை
செய்தாலும் உமதுபதம் சேவித்து - ஐயிருபொன்

தந்து பரிகரியும் தண்டிகையும் சாலுவையும்
சிந்தை மகிழக் கொடுப்போம் - இந்தமொழி

தப்புவதும் இல்லை சதாசிவனார் தாமறிய
எப்போதும் இப்படியே ஈவோம் - இப்போது

## குலகுரு ஆசி

சிந்தை மகிழ்ந்து திருவாய் மலர்ந்துவிடை
தந்து அனுப்புமெங்கள் சுவாமி - அந்தமொழி

மெய்யென்று உளமகிழ்ந்து வேணி பதம்போற்றும்
அய்யர் உமாபதியாம் அந்தணரும் - வையகத்தில்

வித்தைபுத்தி செல்வம் மெய்ஞ்ஞானம் உண்டாகி
சித்தம் மகிழ்ந்து சிறப்பாய் - புத்திரர்கள்

மென்மேலும் உண்டாகி மேதினியி லேசுகமாய்
என்னாளும் வாழ்ந்திருப்பீர் என்று - நன்றாக

ஆசி வழங்கி அரனை மனந்துதித்து
நேச முடன்அளித்தார் நீறு - ஆசையுடன்

## வேந்தர் புறப்பாடு

வேந்தர் களும்வாங்கி மெய்யில் அணிந்துகொண்டு
நேர்ந்து மணிமாளி கையைநீங்கி - வேந்தர்களும்

தண்டிகையி லேறினார் சதுரங்க சேனைதளம்
எண்டிசையு மேநடுங்க எங்கும் - தண்டமிழோர்

பாடிப் புகழ்ந்துவரப் பதினெட்டு வாத்தியங்கள்
ஆவலுடன் சேனை ஆர்ப்பரிக்க - பேடைமயில்

ஆன மடமாதர் ஆடிப் புகழ்ந்துவர
வானுலகு முட்டப் படபடென்று - மானிலத்தில்

அன்னக் கொடிமுதலாய் அனந்தங் கொடியாட
நன்மையுடன் மன்னர் நடந்தார் - பொன்னிநதிக்கு

## கரூர்ப் பசுபதி வணக்கம்

அப்புறத்தில் ஏகி அன்னவர் மகிழ்ந்துமொழி
தப்பாத வேங்கலநல் நாடதனில் - மெய்ப்பான

ஈசர் பசுபதியை எல்லோர் களும்துதித்து
வாச முடன்இருக்க மன்னவரில் - தேசம்

## *குருகுல மக்கள் வாழும் எல்லை*

அருணா நகர்தெற்கு ஆண்மைமிகு வேடுவரை
இருமென்று அனுப்பிவிட்டு யெங்கோன் - பருவமதாய்

பூவலரை மேல்திசையில் போயிருந்து வாழ்கவென்று
மாவலரை நோக்கி வடக்கில் - யாவர்க்கும்

இன்பமுடன் வாழ்ந்திரு மென்று அனுப்பிவிட்டு
பண்புடனே கருவூர்ப் பதியில் - நண்பாக

மறையவரும் தாமும் வையகங்கள் போற்ற
அரசு செலுத்திவரும் அன்னாள் - குருகுலத்து

## *முத்தணிராசன் மகன் - காளத்திராசன்*

முத்தணி ராசன் முன்னோர் குலம்விளங்க
சித்தம் மகிழ்ந்து சிறப்பாய்ப் - பத்தியுடன்

நீலகண்டர் தம்மை நெடுநாள்பா தம்பணிந்தார்
பாலன் பிறந்தான்இப் பார்புகழ - கோலமிகும்

கண்ணான மைந்தனுக்குக் காளத்தி ராசன்என்று
விண்ணோர் புகழ விளம்பினார் - மண்ணுலகில்

இந்தப் படியாய் ஈசன் திருவருளால்
அந்தணரும் மன்னவரும் அன்பாய் - சிந்தைதனில்

தன்மம் தவறாமல் தரணிதனை ஆண்டிருந்தார்
நன்மை பெருக நாளும் - வண்மைசெறி

## *குலகுரு பெருவாழ்வு*

பூசுரர் மெய்ஞ்ஞானம் புகழும் உமாபதியார்
வாசமிகும் இடையாறை மாநகரில் - நேசமிகும்

சத்தியுமை கவுரி தையல்ஞா னாம்பிகையையும்
முத்திதரும் காளத்தி மூர்த்தியையும் - நித்தநித்தம்

பொன்னிநதி மூழ்கிப் புதுமலர்கள் சாத்தி
நன்மை யுடன்பணிந்து நன்றாய் - வண்மைமிகும்

கொங்குமறை யவர்அரசர் குவலயங்கள் உள்ளமட்டும்
நங்கிளைகள் வாழ்கவென்று நாமும் - துங்கமிகு

நாதன் மிகவாழ்த்தி நாலுமறை தப்பாமல்
ஓதிமிக வாழ்ந்தார் உவந்து.

### *நூலாசிரியர்*

203. இன்ன தன்மையாய்க் குருகுலர் கதையினை இசைத்தோர்
கன்ன லின்சுவை யென்னநற் காசிபர் குலத்தில்
மன்ன வன்கவி ராசபண் டிதன்எனும் மறையோன்
சொன்ன நற்கவி புகழுவோர் துலங்கவாழ்ந் திருப்பார்.

### *வாழ்த்து*

204. சந்திர சூரியர் வாழி
சதுர்மறை முதல்வன் வாழி
இந்திரன் வாழி காளத்தி
ஈசர்ஞா னாம்பாள் வாழி
சுந்தர மூர்த்தி வாழி
தொல்புவி விளங்க வாழி
மந்திர மறையும் தேர்ந்த
மாதவ ராசர் வாழி.

205. நன்னலர் தம்மை வென்ற
உமாபதிக் குருவும் வாழி
இன்னகர் வேந்த ரான
எழுமறை யோர்கள் வாழி
மன்னன்முத் தணியும் ராசன்
மகிபனும் வாழி வாழி
அன்னவர் முதலாய் உள்ளார்
அவரவர் கிளையும் வாழி.

## நூற்பயன்

206. இந்தநற் கதையைக் கேட்டோர்
எழுதினோர் படித்தோர் யாரும்
நிந்தனை உரைத்தி டாமல்
நிகழ்த்தியே புகழ்ந்த பேர்கள்
சந்ததி தழைத்து நாளும்
தரணியில் வேந்த ராகி
இந்திர பதவி மெற்று
இருப்பர்நீ டூழி வாழி.

